ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

சூதபுராணிகர் மகரிஷிகளுக்குத் திருவாய்மலர்ந்தருளிய

திருத்துழாய் பிரபாவமென்னும்

# துளஸிமாஹாத்மியம்.

படத்துடன்.

(வடமொழியினின்றும் தமிழ்ப்படுத்தியது)

வித்வான் - ஸ்ரீமாந்

ம. இராஜகோபால பிள்ளையவர்களால்

செவ்விய தமிழ்நடையில் எழுதப்பட்டு,

செஞ்சி - இல்வீடு

ஸ்ரீமான் அரங்கசாமி முதலியாரவர்களால்

சென்னை,

கோமளேசுவரன்பேட்டை, சச்சிதாநந்தம் பிரஸில்

பிரசுரிக்கப்பட்டது.



 [விலை அணா ௩க்கு.

1914.



ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ.

ஸ்ரீ ஹயக்ரீவாய நமஃ.

# துளஸீ மஹாத்மியம்.

## முதல் அத்தியாயம்.

முன்னொருகாலத்தில் ஸ்வர்க்கலோகத்தில் ஸுதர்மா என்கிற தேவஸபையில் முப்பத்துமுக்கோடி தேவர்கள் புடைசூழ வீற்றிருந்த தேவேந்திரன் தேவகுருவான தன்னுடைய ஆசாரியராகிய ப்ருஹஸ்பதியைத் தொழுது மேல் சொல்லப்போகிற விஷயத்தைக் கேட்டுக்கொண்டான் என்பதை ஸூதபுராணிகர் ஸநகாதி மஹரிஷிகளுக்குச் சொன்னர்.

தேவேந்திரன் "ஓ ஆசாரியரே! மிகவும் பயங்கரமான கலியுகத்தில் ஸகலப் பிராணிகளும் கெட்ட நடவடிக்கை யுள்ளவர்களாயும், துக்கிதர்களாயும், நல்மார்க்கத்தை விட்டவர்களாயும், எப்பொழுதும் ஸம்ஸார ஸாகரத்தி லாழ்ந்தவர்களாயும், ஜாதிக் கலப்புடையவர்களாயும், தங்கள் தங்களுடைய விருத்திகளை விட்டவர்களாயும், எல்லோராலும் நிந்திக்கத்தகுந்த நடவடிக்கையுடையவர்களாயும், ஹிம்ஸகர்களாயும் இருக்கப்போகிறார்கள். இப்படி தர்மம் குறைந்து அதர்மம் மேலிட்டபடியால் முக்திக்கு ஹேதுவான மார்க்கம் நசித்துப்போகுமே. அந்த க்ஷணத்திலேயே ஸம்பத்துக்களும் குறைந்துபோய்விடுமே. ஆகையால் எந்த உபாயத்தினால் தர்மார்த்த காமமோக்ஷமென்கிற நான்குவித புருஷார்த்தங்களும் ஸித்திக்குமோ அப்படிப்பட்ட ஸகலைச்வர்யத்தையும் கொடுக்கக்கூடியதான உபாயத்தை த்ரிகாலக்ஞான தேவரீர் அடியேனுக்குக் கிருபையாய் அருள்செய்ய வேணுமென்று

ப்ரார்த்திக்கிறேன்" என்றான். அதற்கு ப்ருஹஸ்பதி "ஓ தேவேந்திரனே! மூன்றுலோகத்திற்கும் ஐச்வர்யத்தைக் கொடுக்கக் கூடியதான துளஸீ தேவியினுடைய மஹாத்மியத்தைச் சொல்லும்படி நான் முன்னமேயே உன்னால் கேட்கப்பட்டிருக்கிறேன். யாவனொருவன், அந்தத் துளஸீ தேவியைத் தன் தோட்டத்தில் வைத்து வளர்க்கிறானோ, அவன் ஸ்ரீ மஹாலக்ஷ்மியினுடைய கடாக்ஷத்திற்குப் பாத்திரனாவானென்பதில் ஸந்தேகமே இல்லை. அந்தத் தேவி எந்த இடத்தில் வாஸம்பண்ணுகிறாளோ அந்த இடத்தில் ஸர்வ சம்பத்தும் நர்த்தனம் செய்யும். அத்தேவியினுடைய ப்ரபாவத்தை நூறுகோடி கல்பங்கள் சொன்னாலும் என்னால் சொல்லமுடியாது. ஆகிலும் அதன் ப்ரபாவத்தை ஹிரண்யகசிபுவினுடைய புத்திரரான ப்ரஹ்லாதாழ்வான் பூமியின் புத்திரனான நரகாசுரனுக்குச் சொல்லியிருக்கிறார். அதை நான் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேளும்" என்றுரைக்கத் தொடங்கினார்.

முன்னொருகாலத்தில் ப்ரஹ்லாதாழ்வான் "எவனொருவன் துளஸீதேவியை நித்தியம் பூஜைசெய்கிறானோ, அவன் இந்த லோகத்தில் இஷ்டமான சுகங்களை அநுபவித்து முடிவில் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைகிறான்; எவ்விடத்தில் துளஸீகாஷ்டம் பிடிஅளவேனு மிருக்கிறதோ அவ்விடத்தில் நாராயணன் முதலான தேவர்கள் நித்தியவாஸம் செய்கிறார்கள்; துளஸீகாஷ்டத்தினுடைய ப்ரபாவத்தைப் படிக்கிறவனுக்கும் கேட்கிறவனுக்கும் இவ்வளவுதான் பலனென்று அளவிட முடியாது; மிகவும் பரிசுத்தமாயும் பாபஹரமாயு மிருக்கிற அப்படிப்பட்ட துளஸீ காஷ்டத்தினுடைய மஹாத்மியத்தைச் சொல்லுகிறேன்; சிரத்தையோடு கேட்கக் கடவீர்; தளங்களினாலேயும், புஷ்பங்களினாலேயும், பழங்களினாலேயும், ஜலங்களினாலேயும், வேர், கிளை இவை முதலியவைகளினாலேயும் பகவானைப் பூஜிப்பதைக் காட்டிலும் துளஸீ தளத்தினால் பூஜிப்பது மிகவும் சிரேஷ்டம். எவனுடைய சரீரமானது துளஸீ காஷ்டத்தினால் கொளுத்தப்படுகிறதோ அவனுடைய சரீரமானது ஸகல பாபங்களையும் போக்கடித்துக் கொள்ளுகிறது. துளஸீ மாலையை அணிந்து கொண்டு எவன் பிராணனை விடுகிறானோ அவனுடைய சரீர சம்பந்தமான சகல பாபங்களும் போய் விடுகின்றன. துளஸீ தீர்த்தத்தை ஒரு

தடவை பானம் செய்தாலும் நினைத்தாலும் அவனுடைய பாபங்கள் சிம்மத்தினால் துரத்தப்பட்ட யானைக் கூட்டம் போன்று ஓடுகின்றன. துளஸீ காஷ்டத்தினால் கொளுத்தப் பட்டவனுக்கு மறு ஜன்மம் கிடையாது. அவனும் உத்தம பதவியை அடைகிறான். அனேக கட்டைகளைப் பரப்பி நடுவில் ஒரு துளஸீ காஷ்டத்தை வைத்து எவனொருவன் கொளுத்தப்படுகிறானோ, அவனுடைய கோடி கல்பங்களாகச் செய்துவந்த பாபங்கள் போய் விடுகின்றன. மறுபடியும் திரும்பி வராத ஸ்தானத்தை அடைகிறான். அக்கினியில் துளஸீ காஷ்டத்தைப் போட்டு அதில் எவன் ஹோமம் செய்கிறானோ அந்த ஹோமம் அவனுக்கு அக்நிஷ்டோம யாகத்தினுடைய பலத்தைக் கொடுக்கக் கூடியது. எவன் துளஸீ காஷ்டத்தினால் பகவானுக்குத் தூபம் போடுகிறானோ, அவன் நூறு யாகத்தினுடைய பலத்தையும் ஆயிரம் கோதான பலத்தையும் அடைகிறான். துளஸீ காஷ்டாக்கினியில் அன்னம் செய்து எவனொருவன் பகவானுக்கு நைவேத்தியம் செய்கிறானோ அவனால் கொக்கப்பட்ட அந்த அன்னம்மேரு பர்வதத்திற்குச் சமானமாகும். துளஸீகாஷ்டாக்கினியினால் தீபம் எவன் ஸமர்ப்பிக்கிறானோ அந்த ஒரு தீபம் ஆயிரந் தீபம் ஸமர்ப்பித்த புண்ணியத்தைக் கொடுக்கிறது. யாவனொருவன் துளஸீ காஷ்டத்தினால் சந்தனம் சேர்த்துக் குன்றின்மணி யளவு சந்தனம் ஸ்ரீமன்னாராயணனுக்குச் சாத்துகிறானோ, அவனுக்குச் சமானமான பிராமணன் பூலோகத்தில் கிடையாது. எந்தத் தினத்தில் துளஸியினுடைய வேரின் மண்ணைப் பூசிக்கொண்டு ஹரிபூஜைசெய்கிறானோ, அந்தத் தினமானது நூறு தினத்தில் செய்த பூஜாபலத்தைத் தருகிறது. எவனுடைய வீட்டில் பகவானுக்குச் சந்தனத்திற்காகத் துளஸீ காஷ்டம் எவ்வளவு காலம் வைக்கப்பட்டுளதோ அவ்வளவு காலமட்டும் உண்டான பலத்தைச் சொல்கிறேன் கேளும். தினந்தோறும் பதினாயிரம்படி எள்ளைத் தானம் செய்வதால் வரும் பலத்தை எவனொருவன் துளஸீ காஷ்டத்தை வைத்திருக்கிறானோ அவன் பகவானுடைய அனுக்கிரஹத்தினால்அடைகிறான். யாவனொருவன்சிரார்த்த தினத்தில் துளஸீ காஷ்ட சந்தனத்தைப் பிதுருக்களுக்குச் சமர்ப்பிக்கிறானோ, அவன் நூற்றெட்டு ச்ரார்த்தத்தினுடைய பலத்தை அடைகிறான். மற்றும் அந்தச் சந்தனத்தினுடைய பரிமளத்தினால் த்ருப்தி யுள்ளவர்களாய், கருடா ரூடர்களாய், ஹரிபதத்தை அடைகிறார்கள். துளஸீ காஷ்டாக்கினியில் எவன் சிரார்த்த

காரியத்தை நடத்துகிறனே, அவன் பித்ருக்களுக்கு ஆயிரஞ்சிரார்த்தத்தினல் உண்டாகிற ப்ரீதியை உண்டுபண்ணுகிறன். சிரார்த்த தினத்தில் வரிக்கப்பட்ட பிராம்மணர்களுக்குளவன் துளஸீ காஷ்ட சந்தனத்தைப் பூசிப் போஜனம் செய்விக்கிறனே, அவனுடைய அந்த பித்ருக்கள் பதினயிரம் கோடி கல்பத்தில் புஜித்த திருப்தியை அடைகிறர்கள். சிரார்த்த தினத்தில் பகவானுக்குத் துளஸீதளம் சேர்த்த தீர்த்தத்தினல் அபிஷேகம் செய்து அந்தத் தீர்த்தத்தை நிமிந்திரண பிராம்மணர்களுக்குக் கொடுத்துப் புஜிப்பிக்கிறவனுடைய பித்ருக்கள் மிகவும் திருப்தி அடைகிறர்கள். துளஸீ காஷ்டத்தினல் நரசிம்ம பிரதிமை செய்து எவன் அர்ச்சிக்கிறனே அவன் தினந்தோறும் அஸ்வமேத பலத்தை அடைகிறன். கெட்ட நடத்தையுடைய பிராம்மணன், மூர்க்கன், அபலானுடைய ஸ்திரிசங்க முடையவன், பஞ்ச மஹா பாதகன், நல்மார்க்கத்தை விட்டவன், வேடன், சூத்திரனிடத்தி லடிமைப்பட்டவன், சொக்கட்டான் ஆடுகிறவன், துர்ஜனன், செய்த நன்றி மறந்தவன், நமக்குமேல் ஒருவரும் கிடையாதென்பவன், எப்போதும் சூத்திர ஸ்திரியிடத்தில் ஸங்கம முடையவன் இப்படிப் பட்டவர்கள் துளஸீ தீர்த்தத்தைப் பானம் செய்த மாத்திரத்தில் ஸ்ரீமன்னராயணனுடைய பதவியை அடைகிறர்கள். துளஸீகாஷ்டத்தினல், ராமன், கிருஷ்ணன், ஹயக்ரீவன், வாமனன் என்கிற அவதாரங்களைப் பிரதிமையாகச் செய்தும், அதே காஷ்டத்தினல் ஸீதை, பூதேவி, மஹா லக்ஷ்மி, துளஸீ, புவனேஸ்வரி, துர்க்கை இவர் முதலான தேவிகளையும் ப்ரதிமையாகச் செய்தும் எவன் தினந்தோறும் அர்ச்சிக்கிறனே அவனுக்கு இவ்வளவு தான் பலனென்பதை வைகுண்டநாதனை பகவானலும் சொல்லமுடியாது. பகவானுடைய சரீரத்தில் சாத்தின துளஸீ சந்தனம் இவைகளை எவனெருவன் தன்னுடைய சரீரத்தில் தரித்துக் கொண்டு பகவன்நாமத்தை ஜபம் செய்கிறனே அவனுக்கு அந்த ஜபம் மேன்மேலும் அதிகமானல் அச்வமேத பலத்தைக் கொடுக்கிறது. துளஸீ காஷ்டத்தினல் மாலை செய்து கையில் வைத்து எண்ணிக் கொண்டு ஜபம் செய்கிறவன் அளவிடக் கூடாத பலத்தை அடைகிறன். துளஸீ மணியை யஞ்ஞோப வீதத்திலும், கழுத்திலும், காதிலும், சிரஸிலும் அணிந்துகொண்டு எவன் ஜபம் செய்கிறனே, அவன் அச்வமேத பலத்தை அடைகிறன். தினந்தோறும் யாவனெருவன் இந்தத் துளஸீ காஷ்ட மாஹாத்மியத்தைப்பாரா

யணம் செய்கிறானோ, அவன் தேவர்களினால் பூஜிக்கப்பட்டவனாய் நற்கதியை அடைகிறான். தக்ஷிணாயன உத்தராயண புண்ணிய காலங்களிலேயும், க்ரஹண காலத்திலேயும், பஞ்சபர்வங்களிலேயும், கெட்ட ஸ்வர்ப்பனத்திலேயும், ச்ரார்த்த காலங்களிலேயும், சிறையில் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் போதும்,கெட்டரோகத்தினால் துன்பப்படுகிற காலத்திலும்,அகாரணமான பிராணவியோககாலத்திலும், அந்திய காலத்திலேயும் அவசியம் எவன் இதை ஜபிக்கிறானோ, அவன் மறுபடியும் திரும்பி வாராததான உத்தம பதிவியை அடைந்து ஆனந்தத்தை அடைகிறான்'' என்று கூறியருளினார்.

ஸ்ரீபாத்ம புராணத்தில் துளஸீ மாஹாத்மியத்தில்
துளஸீ காஷ்ட வைபவம் என்கிற
முதல் அத்தியாயம்
ஸம்பூரணம்.



## இரண்டாவது அத்தியாயம்.



''கேளாய் ஓ ராக்ஷஸேச்வரா! துளஸீயினுடைய ப்ரபாவத்தையும் பூஜா ப்ரபாவத்தையும் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்'' என்று பின்னும் பிரகலாதாழ்வான் சொல்லலுற்றார்.

''எந்த மனிதன் ஆடிமாஸம் சுக்லபக்ஷ ஏகாதசியில் ஆயிரந்தளம் சேர்த்த துளஸீமாலையினாலேயும், பில்வதளத்தினாலேயும், பகவானைப் பூஜைசெய்கின்றானோ அவன் அந்த நாராயணனுடைய கிருபையினால் அதிக ஸம்பத்தும் கீர்த்தியும் வித்தையும் அடைகின்றான். கார்த்திகை மாஸம் சுக்லபக்ஷ த்வாதசியில் ஆயிரந்துளஸீ தளங்களினாலேயும் பில்வபத்திரங்களினாலேயும் எவன் பூஜை செய்கிறானோ, அவன் மனதினால்நினைத்த பலனை அடைகிறான். நல்ல வாரங்களிலும் நல்லதிதிகளிலும் துளஸீதளத்தை எடுத்துப் பூஜை செய்யவேண்டியது. புரட்டாசி மாஸம் சுக்ல சதுர்த்தசியில் ஆயிரந் துளஸீ தளங்களினாலும், பில்வபத்திரங்களினாலும், அருகம்புல்லினாலும் ஸ்ரீஹரியைப் பூஜை செய்பவன், அணிமா முதலான சித்திகளை அடைந்து, நக்ஷத்ர ஸ்தானத்தை அடைகிறான். ஸ்ரீஜயந்தி, ஸ்ரீராமநவமி, சுபகரமான வீமஏகாதசி, வைகாசி மாஸம் பௌர்ணமை, ஆனிமாஸம் சுக்லபஞ்சமி, ஐப்பசிமாஸம்

ஸீதாநவமி, கார்த்திகை மாஸம் கிருத்திகா நக்ஷத்திரம் கூடிய பௌர்ணமை, மார்கழி மாஸமும் தைமாஸமும் கூடுகிறதினம், இப்படிப்பட்ட புண்ணியதினங்களிலும், மன்வாதி யுகங்களிலும், துளஸீகளினுலும், அனேக கோடிகளினுலும், பில்வதளங்களினு லும் கோவிந்தனை எவன் பூஜிக்கிருனே அவன் பெறும் பலத்தை அளவிட்டுச் சொல்லக் கோடி ப்ரும்ம கல்பகாலமும் போதாது. அவன் விஷ்ணுபதத்தை யடைந்து, மறுபிறப்பைஅடைகிறதில்லை. ஏகாதசியில் பகவானைத் துளஸீ முதலான பரிமளங்கள் சேர்த்த தீர்த்தத்தினுல் அபிஷேகம் செய்து, அந்தத் தீர்த்தத்தைப் பானம் செய்யக்கடவன். அப்படி அந்தத் தினத்தில் எவனொருவன் துளஸீ தீர்த்தத்தைச் சாப்பிடாமல் இருக்கிருனே அந்த மூடன் ரௌரவாதி நரகத்தை அடைகிறுன். எந்த ஏகாதசியில் மனிதர் கள் துளஸீ தீர்த்தமின்றிப் புஜிக்கிருர்களோ, அந்தத்தினத்தைப் பகவான் அவர்களுக்குச் சுதினமாகச் செய்யமாட்டான்.

பார்வதியானவள் துளஸீ தேவியைப் பூஜித்தமாத்திரத்தில் சிவனுடைய பாதி சரீரத்தை அடைந்தாள். அப்படியே துர்க்கை என்பவளும் துளஸீ பூஜையினுலேயே ராக்ஷஸர்களைக் கொல்ல ஹேதுவானுள். அப்படியே அருந்ததி தேவியும் துளஸீ பூஜையி னுல் வஸிஷ்டரை நாதனுக அடைந்தாள். அதே பூஜையினுல் ருக் மணியும் கிருஷ்ணபகவானை அடைந்தாள். துளஸீயினுடைய மஹி மையினுல் சுக்ராசாரியரும் ஸஞ்சீவினீ என்கிற வித்யையை அடை ந்தார். அதின் ப்ரபாவத்தினுலேயே தேவகுருவும் கீஷ்பதி என் னும் பெயரை அடைந்தார். வாயுகுமாரனுன ஹனுமானும் அத் துளஸீமகிமையால் ஸமுத்திரத்தைத் தாண்டினுர். அதே கார ணத்தால் ஆதிசேஷனும் பூமியைத்தாங்க வல்லவனுனுர். அத் துளஸீயின் ப்ரபாவத்தினுல் ஸ்ரீராமனும் யுத்தத்தில் ராவணனை ஜெயித்தார். விநாயகரும் துளஸீ பூஜையினுல் கஜாஸுரனை ஜயி த்து விக்னேச்வரன் என்னும் பெயரை அடைந்தார். துளஸீயின் மஹாத்மியத்தினுல் ஸுப்ரமண்ணியரும் தாரகனென்னும் அஸு ரனை ஜெயித்துத் தேவஸேநாபதியானுர். மிகவும் பராக்ரமசாலி யான வீரபத்திரனும் இதன் ப்ரபாவத்தினுல் துஷ்டர்களானராக்ஷ ஸர்களையும் தக்ஷனையும் ஜெயித்தான். ஆகையினுல் ஹரிதினத்தில் துளஸீ பூஜை விசேஷமாய்ப் பண்ணவேண்டியதென்று பகவா னே முன் தேவதைகள் சமூகத்தில் சொல்லியிருக்கிருர். சிவபிரா

னும் திரிபுரஸம்ஹாரகாலத்தில் தன்னால் அசுரர்களையெல்லமுடியா மல் களைத்துப்போய், பிறகு துளஸீயைப் பூஜைசெய்து திரிபுர ஸம்ஹாரம் பண்ணினன். ஆதிசேஷனும், துளஸீ பூஜையினால் ஸர்ப்பராஜன் என்னும் பெயரையுமடைந்து பூலோக முழுமையும் தாங்கினன். பக்ஷிராஜனைகருடனும் துளஸீ பூஜைசெய்து விஷ்ணு மூர்த்திக்கு வாஹநமாகப் பெற்று அம்ருதத்தையும் கொண்டுவந் தான். இந்தத் துளஸீ தேவியை ஆராதித்து நந்தியும் ருத்திரனு க்கு வாகனமானன். குலபர்வதங்களும் அஷ்டதிக்கஜங்களும் துளஸீ பூஜையினால் அழியாத ஆயுஸ்ஸை அடைந்து பூமியையும் தாங்கிக்கொண்டிருக்கின்றன. ஸாவித்ரியும் இத்தேவியினுடைய பூஜையால் பதிவ்ருதா தர்மத்தை அடைந்து பர்த்தாவுக்குமிகவும் சிச்ருஷை செய்தாள். ஸரஸ்வதியும் இப்பூஜையினால் வாக்தேவி என்னும்பெயரை அடைந்து ப்ரும்மாவைப்பதியாக அடைந்தாள். துர்க்காதேவியும் துளஸீ பூஜையால் மஹிஷாஸுரனையும் ரக்த பீஜனென்கிற அஸுரனையும் சம்பாஸுரனையும் நாசம்செய்தாள். துளஸீ பரிசரணத்தினால் ம்ருகண்டு மஹாமுனியும் மார்க்கண் டேயனென்னும் புத்திரனை அடைந்தார். ஸாமான்ய ஜனங்களா லும் ரிஷிகளாலும் பதிவ்ரதைகளாலும் துளஸீ தேவியானவள் அவசியம் பூஜிக்கத்தக்கவள். தேவஸ்த்ரீகளில் ரம்பையானவள் துளஸீ தேவியைப் பூஜித்துத் தேவேந்திரனைப் பதியாக அடைந் தாள். ஆகையினால் துளஸீ பூஜை விசேஷமாய்ச் செய்யவேண்டி யது. மாஸ ப்ரவேசங்களிலும் சதுர்த்தசி த்வாதசி பர்வதினம் வெள்ளிக்கிழமை செவ்வாய்க்கிழமைஇந்தத் தினங்களிலும்துளஸீ தேவியைப் பூஜைக்காகக் கொண்டுவரக்கூடாது. அப்படி இந் தத் தினங்களில் துளஸீயைக் கையினால் கிள்ளினால் பகவா னுடைய தலையைக் கிள்ளுவதுபோ லாகும். பகவத் பூஜை செ ய்த தீர்த்தத்தை ஸ்திரீயாகிலும் புருஷனாகிலும் காலையில் பானம் செய்தால் மனதினால் நினைத்த பலனை அடைகிறார்கள். அகா லத்தில் ஸ்த்ரீயாகிலும் புருஷனாகிலும் துளஸீயைக் கிள்ளி னால் ப்ரும்ம ஹத்தியாதி பாபத்தை அடைவர். பலாச புஷ்ப த்தினாலும் துளஸீயினாலும் பில்வத்தினாலும் பகவானை நன்றாய் அபிஷேகம் செய்து எவன் அரச்சனை செய்கிறானோ அவன் விஷ் ணுவின் ஸாம்யத்தை அடைகிறான் என்பதில் கேட்க வேண்டிய தில்லை. துளஸீ தேவியைத் தைமாசம் வெள்ளிக்கிழமை ஷோட சோபசாரத்தோடு எவன் பூஜிக்கிறானோ, அவனுக்கு இஷ்டமான

பலத்தை இந்தத்தேவி கொடுப்பாளென்பதில் சந்தேகமேயில்லை. மாசி மாதம் சுக்லத்வாதசியில் எவன் துளஸீ தேவியைப் பூஜை செய்கிறானோ அவன் அச்வமேத பலத்தை அடைகிறான். மாசி மாஸத்தில் உதயகாலத்தில் துளஸீ வேர் மண்ணைப் பூசிக்கொண்டு எவன் ஸ்நாநம் செய்கிறானோ அவன் தன்னுடைய பரிவாரங்களுடன் விஷ்ணு லோகத்தில் சந்தோஷத்தை அடைகிறான். எவன் பங்குனி மாஸ பௌர்ணமை, அமாவாஸை, த்வாதசி இந்தத் தினங்களில் ராத்ரியில் அத் தேவிக்குத் தீபம் ஸமர்ப்பிக்கிறானோ, அத்துடன் பால், நெய், சர்க்கரை முதலானவை சேர்த்த அன்னத்தையும் நிவேதனம் செய்கிறானோ, அவன் பிறப்பு, இறப்பு, கிழத்தனம் இவை ரகிதமானவனாய் மோக்ஷசாம்பிராஜ்யத்தை அடைகிறான். சித்திரை மாதத்தில் ராத்திரியிலும் பகலிலும் சமமான காலத்திலும், பௌர்ணமையிலும் எவன் பாயஸான்னத்தை நிவேதனம் செய்கிறானோ அவன் உத்தமமான ஸித்தியையடைகிறான். வைகாசி மாஸம் சுக்லத்ரிதியையிலும் பௌர்ணமையிலும் தயிர் கலந்த அன்னத்தை எவன் துளஸீ தேவிக்கு நிவேதநம் செய்கிறானோ அவன் வாமநலோகத்தை அடைந்தவனாய் அவ்விடத்திலேயே சந்தோஷ மடைகிறான். ஆனிமாஸம் சுக்கில தசமீ முதல் மூன்று நாள் யவான்னத்தினால் எவன் தேவியான துளஸீயை த்ருப்தி செய்விக்கிறானோ அவன் விஷ்ணுவுக்கு இஷ்டனாகிறான். க்ஷீரஸமுத்திரத்திற்குப் பெண்ணான இத்தேவியை எவன் ஆடிமாஸம் சுக்லபக்ஷம் த்வாதசி முதல் கார்த்திகை மாஸம் சுக்கில பக்ஷத்வாதசி வரையிலும் விசேஷமாகப் பூஜை செய்கிறானோ அவன் இந்தப்பூஜையினால் ஒவ்வொரு மாதத்திலும் அநேக தனதான்ய முதலான ஐச்வரியத்தை அடைந்து புத்ர பௌத்ராதி பாரம்பர்யத்துடன் மோக்ஷஸாம்பிராஜ்யத்தை அடைகிறான். படுக்கும்போதும் புரளும்போதும் எழுந்திருக்கும்போதும் பகவானுக்கு இஷ்டையான இந்தத்தேவியை எவன் நினைக்கிறானோ அவன் நல்ல லோகத்தை அடைகிறான். ஸ்ரீஜயந்தியினுடைய நடுராத்திரியில் மலடியான எந்த ஸ்திரீ துளஸீ தேவியைப் பூஜிக்கிறாளோ அவள் சீக்கிரமாய்ப் புத்திரனை அடைகிறாள். புரட்டாசிமாஸத்தில் கஜச்சாயை என்கிற பெயருடைய தினத்தில் துளஸீகலந்த அன்னத்தை எவன் பித்ருக்களுக்குத் தத்தம் செய்கிறானோ அதையும் ச்ராத்தம்போல் ப்ராம்மணர்களைவரித்து அன்னத்தை ஸமர்ப்பிக்கிறானோ, அவனுடைய அந்தப் பித்ருக்கள் ஆயி

ரம் வருஷ ப்ரீதியை அடைகிறார்கள். புரட்டாசிமாஸம் கிருஷ்ண த்ரயோதசியில் மகாநக்ஷத்திரத்தோடு சந்திரனும் சூர்யனும் கூடியிருந்தால் அந்ததினமானது முன்சொன்ன கஜசாயை என்கிற தினத்திற்கு ஸமமானது. அதேமாஸத்தில் சுக்லபக்ஷ த்வாதசியிலும் பௌர்ணமி அமாவாஸையிலும் உளுந்து கலந்த அன்னத்தை எவன் நிவேதநம் செய்கிறானோ அவனுக்கு எமலோகதர்சனம் கிடையாது. மஹாநவமியில் எந்த மலடியானவள் ஸ்ரீதுளஸீதேவியை நெய்யினாலும் பாயஸத்தினாலும் அபிஷேகம் செய்து எட்டுப் பதிவ்ருதாஸ்திரீகளைப் போஜநம் பண்ணிவைக்கிறாளோ, அவள் நல்லபுத்ரபாக்யத்தை அடைகிறாள். க்ருத்திகையிலும், பௌர்ணமியிலும், ப்ரதிதினமும் சாயங்காலம் துளஸீ தேவிக்குத் தீபம்வைக்கிறவன் விஷ்ணுவுக்கு ஸேநாபதியாகிறான். அவனுக்கு நல்ல ஞானம் புத்தி இவைகள் உண்டாகின்றன. ஸ்ரீமன் நாராயணன் தூங்கி எழுந்திருக்கிற வேளையில் பருப்பு வெல்லம் பால் நெய் இவைகள் சேர்ந்த அன்னத்தை யாமம்தோறும் நைவேத்திபம் எவன் செய்கிறானோ. அவன் ஸமஸ்தலோகங்களையும் தாண்டி வைகுண்டத்தை அடைகிறான். மார்கழி மாஸத்தில் முத்கான்னத்தை விடியற் காலத்தில் மிகவும் பரிசுத்தனாய் துளஸீ தேவிக்கு எவன் நிவேதநம் பண்ணுகிறானோ, அவன் ஸர்வலோகத்திற்கும் அதிபதியாகிறான். த்வாதசியில் பசுவையும் துளஸீ தேவியையும் பகவானையும் எவன் மஹா நைவேத்யங்களினால் பூஜை செய்கிறானோ அவன் கோலோகாதிபதியாகிறான். அப்படியே தைமாஸம் பிரவேசித்திலும் அந்தமாதத்தினுடைய பௌர்ணமையிலும் அமாவாசையிலும் பகவானை விசேஷமாய் பூஜை செய்து ஹரிதினத்தில் தானும் புஜித்துத் தூங்காமலிருக்கிறவன் விஷ்ணு ஸாயுஜ்யத்தை அடைகிறானென்பதில் ஸந்தேகமேயில்லை. இப்போது சொல்லப்பட்ட மாதங்களில் ஒரு மாதமாவது மேற்சொன்னவாறு பூஜிப்பவன் இவ்விடத்தில் ஸகல போகங்களையும் அநுபவித்து முடிவில் திரும்பிவராத பதவியை அடைகிறான். இப்படி இந்தபன்னிரண்டு மாதங்களிலும் ஸ்திரீகளாகிலும் புருஷராகிலும் பூஜைசெய்வார்களேயானால் அவர்களுடையும் பலத்தைச் சொல்ல ஸ்ரீமன் நாராயணனாலேயும் முடியாது'' 'என்றருளிச் செய்தார்.

ஸ்ரீபாத்ம புராணம் துளஸீ மாஹாத்மியம் மாஸபூஜா
பலனைச் சொல்கிற
இரண்டாவது அத்தியாயம் சம்பூரணம்.



## மூன்ருவது அத்தியாயம்.



"ஓ குழந்தாய்! மறுபடியும் துளஸீ பூஜையின் மாஹாத்மியத்தைச் சொல்கிறேன் கேளும்" என்று பிரகலாதாழ்வான் கூறத் தொடங்கினர். "தினந்தோறும் துளஸீ தேவியின் ஸமீபத்தில் கோலங்களினல் விசித்திரமாக அலங்கரித்துக் கருப்பஞ் சாற்றினலும் பாலினலும் இளநீரினலும் அபிஷேகம் செய்து தூப தீபம் மஹா நைவேத்திபம் முதலானவைகளைச் சமர்ப்பித்து எவர்கள் அத்தேவியைத் திருப்தி செய்விக்கிருர்களோ அவர்கள் வருஷத்திற்குள்ளாக அஷ்டை சுவரியத்தையும் அனுபவிக்கத் தகுந்த புத்ரனை அடைவார்கள். எந்த ஸ்த்ரீ வெள்ளிக்கிழமை ஒரு ப்ருஹ்மசாரியைப் பாயஸான்னத்தினல் திருப்தி செய்து வைக்கிருளோ அவள் ஒரு வருஷத்திற்குள்ளாகப் புத்ரனை அடைவள் என்பதில் ஸந்தேகமே இல்லை. அதற்கு உதாஹரணமாய் ப்ரும்ம ஹத்தியாதி பாபத்தைப் போக்கக் கூடியதான ஒரு கதை சொல்லுகிறேன் கேளும். முற்காலத்தில் அயோத்யா பட்டணத்தில் ஸூர்ய வம்சத்திலுதித்த தசரத சக்ரவர்த்தி அறுபதினயிர வருஷம் ராஜ்ய பாரஞ்செய்து எப்பொழுதும் பகவானைத் தவிர வேறொருவரையும் நினையாமல் தனக்குச் சத்ருவாக வந்தவர்களை எளிதில் வென்றவராயும் அஷ்டதிக்குகளிலும் நிறைந்த கீர்த்தியுடையவராயும் நீதி செலுத்தி வந்தார். இப்படிப் பட்ட மஹாத்மாவுக்குப் புத்திரபாக்கிய மில்லாமல் வ்யசனக்கடலி லாழ்ந்தவராய் மிகவும் தர்ம சீலையான தன்னுடைய முதல் பத்நியாகிய கௌஸல்யை யிடத்தில் ரஹஸ்யமாய்த் தன்னுடைய வருத்தத்தைச் சொல்லிக்கொண்டார். ஓ நாயகியே! நான் அறுபதினயிரம் வருஷம் அரசாண்டும் சத்ருக்களை வென்றும் அஷ்டைச்வர்யத்தையு மனுபவித்தும் எட்டுத் திக்குகளிலும் கீர்த்தி பெற்றவனயிருந்தும் நான் பூலோகத்தில் அனுபவிக்காத விஷயம் கிடையாதிருந்தும் இப்படிப்பட்ட என்னுடைய ஸம்பத்துக்கள் புத்திரனில்லாமையால் சோபிக்கவேயில்லை. கண்கள் இருந்தும் புத்திரனைப் பார்க்காமையினல் குருடனுகவிருக்கிறேன். காதுகளிருந்தும் குழந்தைகளுடைய மழலைச் சொற்களைக் கேட்காமையால் செவிடனுகவிருக்கிறேன். இப்படி அனேக சாதநங்களிருந்தும் பிள்ளை யில்லாத யான் நரகத்தை படைவேன் என்பதில் ஸந்தேகமில்லை. என்ன செய்வேன்; எங்கு செல்வேன்; எவ்விதம் சுகமடைவேன் என்றிப்படி ப்ரலாபிக்கிற தன் னுயகனைப் பார்த்துப் பின் வருமாறு மொழியலானள்.

ஓ பூபதியே! இப்படி சரீரத்தையும் ஆத்மாவையும் தஹிக்கக் கூடியதான இச்சிந்தையை விட்டு விடுங்கள்; இப்படி சிந்தித்துக்கொண் டிருந்தால் சுகம் எப்படி வரும். சத்ருக்கள் மதிக்க மாட்டார்கள். ஆகையால் இச்சிந்தையைவிட்டு மனதைத் திடம் செய்துகொண்டு ஸ்ரீமன் நாராயணனை த்யாநம்செய்தால் அவன் சுகத்தைக்கொடுப்பான். இப்படி சுகத்தைக் கொடுக்கிறான் என்கிற விஷயத்தில் புத்ர பாக்கியத்தைக் கொடுப்பானென்னசச்சந்தேகமேயில்லை. என்றாள். இப்படி சொன்ன வார்த்தையைக்கேட்ட அரசன் தன் தேவி யுடன் இடை விடாமல் ஒருவருஷ காலம் ஸ்ரீமஹா விஷ்ணுவைப் பூஜை செய்தார். இப்படி பூஜை செய்து வருகிற நாளில் ஒருநாள் சதிபதிகள் தூங்கிக்கொண் டிருக்கிற வேளையில் பகவான் பீதாம்பரதாரியாயும் சங்கு சக்ரதாரியாயும் இவர்களுக்கு ஸேவை கொடுக்க அதைப் பார்த்து மிகவும் ஆனந்த ஸாகரத்தி லாழ்ந்தவர்களாய்ப் பகவானை பூஜித்தார்கள். அப்போது செய்த பூஜையினால் ஸந்துஷ்டனான பகவான் பின்வருமாறு சொல்லியருளினார்.

ஓ அரசனே! மிகவும் பக்தியுடன் உங்களால் செய்யப்பட்ட பூஜையால் சந்தோஷ மடைந்தேன். இஷ்டமான வரத்தைக் கொடுக்கிறேன் கேளுங்கள் என்று சொல்வதைக் கேட்ட அரசன் ஓ ஸ்வாமி! தேவரீர் எங்களுக் கிஷ்டமான வரங்களைத் தருவதே நிச்சயமாயிருந்தால் தேவரீரைப் போன்ற புத்திரனை எங்களுக்குத் தரவேணுமென்று மிகவும் வணக்கத்துடன் கேட்டுக்கொண்டார்கள். பகவான் அதற்கு அரசனே! மூன்று லோகங்களிலும் எனக்குச் சமானமானவன் ஒருவனும் கிடையாது. அப்படிப்பட்ட நான்உங்களுக்குப் புத்ரனாக வந்து ஜனிக்கிறேன். என்னுடைய நேத்ரகாந்தியிலிருந்து உண்டானவளாயும்உலகத்தாரால்பூஜிக்கப்பட்டவளாயும் அமிருதரூபியாயும்எனக்குமிகவும்இஷ்டையாயுமிருக்கிற துளஸீ தேவியை நீ ஒரு வருஷ பரியந்தம் தினந்தோறும் பால்,கருப்பஞ்சாறு இளநீர் இவைகளினால் அபிஷேகஞ் செய்து தூபதீபாதிகள் சமர்பித்துப் பாயஸான்ன முதலான மஹா நைவேத்தியத்தை மஹா பக்தியுடன்பத்னி சமேதனாய் நிவேதனம் செய்து பூஜை செய்வாயே யானால் அந்தப் பூஜையினால் மிக்க பிரீதியுடையவளாய் அத்தேவி உனக்கு இஷ்டமான புத்ரர்களைக் கொடுத்து உன்னைச் சந்தோஷமடையச் செய்வாள் என்று வரத்தை கொடுத்துப் பகவான் அவ்விடத்திலேயே மறைந்து போய் விட்டார். இப்படிப்

பட்ட ஆச்சரியத்தைக் கேட்டிவர்கள் தூக்கத்தை விட்டெழுந்து மந்திரிகளுடன் சொல்லிச் சந்தோஷமடைந்து உலகமாதாவான துளசிதேவியைப் பூஜை செய்வதற்கு ஆரம்பித்தார்கள். முற்றத்தில்மண்டபமியற்றி நாற்புரங்களிலும் மேடைபோட்டு அந்த மண்டபத்தில் துளசிதேவியை வைத்துப் பால் முதலியவைகளால் வளர்த்து வந்தார்கள். பிரதி தினமும் பட்ட மஹிஷீயான கௌஸல்யை துளசி பூஜை செய்யும் விஷயத்தில் மிக்க ஆவலுடையவளாய், காலையிலெழுந்திருந்து ஸ்நானம் முதலான நித்ய கடனை முடித்து,துளஸீ மண்டபத்தைச்சுத்திசெய்து,கோலம்போட்டுப் பால் முதலிய வற்றால் அபிஷேகஞ் செய்து, பந்தர் போட்டு, புஷ்பம் முதலிய வற்றால் அலங்கரித்து ஆறு ரஸங்களோடு கூடிய மஹா நைவேத்யத்தை நிவேதனஞ் செய்து பிராமண போஜனஞ் செய்வித்துத் துளஸி ஸ்தோத்திரத்தினாலும்மூலமந்திரத்தினாலும்கவசத்தினாலும் வருஷ பரியந்தம் அரசனுடன் பூஜை செய்தாள். இப்படி விசேஷமாய் இவர்கள் பூஜை செய்ததினால் துளஸிதேவியானவள் நான்கு கைகளுடனும் கறுத்துச் சுருண்ட மயிருள்ளவளாயும் பூர்ண சந்திரன் போல முகமுடையவளாயும் மிகவும் பிரகாசமான குண்டலத்தைத் தரித்தவளாயும் அழகானசலங்கை கட்டிய ஒட்டியாணத்தை இடுப்பிலணிந்தவளாயும் வெளுத்தவஸ்திரத்தை அணிந்துகொண்டும் பரிமளமான சந்தனத்தைப் பூசிக்கொண்டும் இடது பக்கத்தில் பார்வதி சரஸ்வதி இவர்களுடனும் வலது பக்கத்தில் ஸ்ரீமஹா லக்ஷ்மீயுடனும், அநேக தேவஸ்திரிகள் நாற்புறத்திலும் புடை சூழப்பட்டவளாய்த் தரிசனம் கொடுத்தாள். இச்சேர்வையைக்கண்டரசன், உலகமாதாவான துளஸி தேவியை ஸ்தோத்திரஞ் செய்ய வாரம்பித்தார்.

ஓ உலக மாதாவே உன்னை நமஸ்கரிக்கிறேன் ; உன் அனுக்கிரகத்தினால் பிரம தேவன் ஸ்ருஷ்டியையும் ஸ்ரீமன் நாராயணன் ரக்ஷணத்தையும் மஹேச்வரன் நாசத்தையும் செய்கிறார்கள் ; உன்னைப் பூஜித்தவர்கள் எப்படிப்பட்ட சங்கடத்தையும் அடைய மாட்டார்கள். உன்னைப் பூஜை செய்தவர்கள் அடையாத வஸ்துக்கள் உலகத்தில் கிடையா. உன் கடாக்ஷம் பெற்றவன் மிகவும் ச்லாகிக்கக் கூடியவன். இப்படிக்கெல்லாம் இருக்க நான் புத்திரனில்லாமல் மிகவும் பரிதபிக்கிறேன். அப்படிப் பட்ட என்னிடத்தில் கிருபை கூர்ந்து புத்ரனை அளிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன் என்று ஸ்தோத்ரம் செய்தார்.

அதற்குத் தேவி, அரசனே! உன்னுடைய பூஜைகளினுலும் ஸ்தோத்திரங்களினுலும் மிக்க சந்தோஷமடைந்தேன். இன்று முதல் துளசி காஷ்டங்கள் சேர்த்துப்புத்ரகாமேஷ்டி என்கிற யாகத்தினுல் பகவானைத் திருப்தி செய்துவைத்துப் பாயஸான்னங்களினுல் பிர்மசாரிகளைச் சாப்பிடச் செய்விப்பாயே யானல் அவற்றால் பிரீதி யடையும் பகவான் தானே உனக்குப் புத்திரராக அவதரிப்பார். வரப்போகிற சித்திரை மாதத்தில் மிக்க கீர்த்தியுள்ள புத்ரன் பிறக்கப் போகிருன் என்றிப்படி வரம் கொடுத்து விட்டு அவ்விடத்திலேயே மறைந்து விட்டாள். உடனே அரசன் மிக்க ஸந்தோஷமடைந்து துளசி தேவியைப் பூஜித்து பிர்மசாரிகளைப் பாயஸான்னங்களினுல் சாப்பிடச் செய்து துளசி காஷ்டங்கள் சேகரித்துக்கொண்டு புத்ரகாமேஷ்டியாகஞ் செய்தார். உடனே ஸ்ரீமன் நாராயணனுடைய அம்ஸ பூதர்களான இராமன், பரதன் இலக்ஷ்மணன் சத்ருக்னன் என்கிற நான்கு புத்ரர்களை யடைந்து ஸகல போகங்களையும் அனுபவித்து முடிவில் மோக்ஷத்தை யடைந்தார்.

இப்படிப் பட்ட துளசி தேவியின் மஹாத்மியத்தை இரவும் பகலும் ஸமமான காலத்திலும் மாதப்ரவேசங்களிலும் புண்ணிய தினங்களிலும் அமாவாஸையிலும் க்ரஹண காலங்களிலும் ச்ரார்த்த காலத்திலும் ஸ்ரீஜயந்தியிலும் ஸ்ரீராம நவமியிலும் சிவராத்ரியிலும் துவாதசியிலும் ஹரிதிவஸத்திலும் மஹா நவமியிலும் இதரமான விரதகாலங்களிலும் எவர்கள் படிக்கிருர்களோ அவர்கள் புத்ரப் பேற்றையும் கன்யா ஸ்திரீகள் தனக்கிஷ்டமான புருஷரையும் படிப்பில்லாதவன் படிப்பையும் ஸம்பத்தில்லாதவன் ஸம்பத்தையும் அரசர்கள் ஜெயத்தையும் வைசியர்கள் வியாபார லாபத்தையும் பிராமணர்கள் விசேஷமான ஞானத்தையும் சூத்திரர்கள் பிராமணர்களிடத்தில் பக்தியையும் ஸ்திரீகள் நல்ல சௌபாக்யத்தையும் அடைவார்கள் இந்த ஸ்தோத்ரத்தை எவனொருவன் துளஸியின் சமீபத்தில் அடிக்கடிபாராயணம்செய்கிருனே அவன்தீர்க்காயுஸுடையவனுய் அஷ்டைச்வரியத்தை அனுபவித்து வைகுண்ட பதவியை யடைந்து அவ்விடத்திலேயே நல்ல சுகங்களை யனுபவிக்கிருன்'' என்று பிரகலாதாழ்வான் கூறியருளினர்.

ஸ்ரீபாத்ம புராணத்தில் துளசிமாஹாத்மியத்தில் தஸரதர் புத்ரவரம் பெறுகிற :மூன்ருவது அத்தியாயம் சம்பூர்ணம்.



## நான்காவது அத்தியாயம்.



காலையிலெழுந்திருந்து யாதொருமனிதன் சுத்தமனதுடைய வனாய்த் "துளஸி தேவியை ஸங்கீர்த்தனம் செய்கிறானோ அவன் மிக்க புண்ணியத்தை யடைகிறான் என்று புண்டரீகன் என்பவரால் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தோத்திரமோ மிகப்பெரியது. அதை யான் சொல்லுகிறேன் கேளும்" என்று பிரகலாதாழ்வான் மீண்டும் சொல்லலுற்றார். மிகவும் மங்களகாமானவளாயும் மோக்ஷத்தைக் கொடுக்கிறவளாயுமிருக்கிற ஓ துளஸிதேவியே! உன்னை நமஸ்கரிக்கிறேன. நீ என்னை ஸர்வாபத்திலும் காப்பாற்றக் கடவாய் உன்னைப் பார்த்தமாத்திரத்தினால் பாவிகள் தங்களுடைய பாவங்களைப் போக்கிக் கொள்கிறார்கள். ஸ்தாவர ஜங்கமமானஇந்தலோகம் உன்னாலே சுமக்கப்படுகிறது. ஸகல மனிதர்களும் ஸ்திரிகளும் ஒரு தடவை உன்னைக் கையெடுத்து அஞ்சலி செய்தால் அவர்கள் ஒரு பொழுதும் நாசமடையாத ஐஸ்வரியத்தை அடைகிறார்கள். துளஸியோடு வாஸம் செய்கிற பிராமணர்கள் இருக்கிற இடம் மிகவும் பரிசுத்தமானது. துளஸிதேவியினிடத்தில் ஸகல தேவதைகளும் வாஸம் செய்கிறார்கள். ஆகையால் துளஸி தேவியைப் பூஜிப்பது ஸகல தேவதைகளையும் பூஜிக்கிறது போலாகிறது. ஸர்வ ஸம்பத்தையும் கொடுக்கக் கூடியஉனது ஸ்தோத்திரத்தை எவன் படிக்கிறானோ அவன் உத்தமகதியை யடைகிறான். இந்தஸ்தோத்ரத்தைச்சொல்லிக்கொண்டே துளஸீதள மெடுத்து எவனொருவன் பகவானைப் பூஜை செய்கிறானோ அவன் மறுபடியும் திரும்பிவாராததானமார்க்கத்தை யடைகிறான்.

துளஸீ, ஸ்ரீ மஹாலக்ஷ்மீ, லக்ஷ்மீ, வித்யா, யசஸ்வினீ, தர்மியா, தர்மமயி, தேவி, தேவ தேவ மனப்பிரியி, லக்ஷ்மீப்ரஸகி, ஸுப்ரு, பூ, பூமி, அசலா, அமலா என்னும் துளஸீ தேவியினுடைய இந்தப்பதினாறு நாமங்களையும் எவனொருவன் சங்கீர்த்தனம் செய்கிறானோ அவன் உத்தம பதவியை அடைகிறான். துளஸி காஷ்டத்தினால் செய்தமாலையை எவன் அணிந்து கொள்கிறானோ அவன் கௌஸ்துப மாலை யணிந்த பகவானுடைய ஸ்தானத்தை யடைகிறான். துளஸி மாலையையும், தாமரை மணி மாலையையும் அணிந்துகொண்டு துளஸியின் சமீபத்தில் போய்த் துளஸீ தேவியின் நாமத்தையும், அஷ்டாக்ஷரத்தையும், பஞ்சாக்ஷ

ரத்தையும் ஜபித்துக்கொண்டு வாஸுதேவனேயும் ஹ்யக்ரீவனே யும், வராஹனேயும், நாரஸிம்மனேயும், ராகவனேயும், லக்ஷ்மீயை யும், பூதேவியையும், பார்வதியையும், தூர்க்கையையும், ஸரஸ்வதி யையும், காயத்ரியையும் சிவசூக்தத்தையும் விஷ்ணுஸூக்தத்தை யும், இன்னும் எல்லா மந்த்ரங்களேயும் மிகப்பரிசுத்தனுப் எவ னெருவன் ஜபிக்கிருனே அவன் கோடி கல்பங்களில் அடைய வேண்டிய பலத்தை ஒருமாதத்தில் அடைகிருன். துளஸியின் காற் று எந்த இடத்தில் படுகிறதோ அந்தக் தேசவாஸிகளுக்கும் துள ஸியைத்துக்காப்பாற்றப்பட்டவீட்டிலுள்ளவர்களுக்கும் மோக்ஷத் திற்குப் போகக் கூடியபல முண்டாகிறது. துளஸியின் காற்றைப் பரிசித்தவன் ஸர்வ பாவங்களேயும் ஒழித்து மோக்ஷமடைகிருன். அதற் குதாரணமாய் ஒரு கதை சொல்லுகிறேன் கேட்பீராக.

முன் ஒரு காலத்தில் கெட்ட நடவடிக்கையுள்ள பௌண்ட் ரகனென்கிற வேடனெருவனிருந்தான். அவன் தினந்தோறும் நூறு மிருகங்களே அடித்தும் பிராஹ்மணர்களுடைய ஸொத் தைத் திருடியும் வழிப்போக்கர்களே அடித்தும் அவர்களுடைய தனத்தைப் பிடுங்கியும், பலாத்காரமாய்ப் பிராமணர்களே அடித் தும், பசுக்களேக் கொன்றும், ஸ்திரீகளேக் கொன்றும், ஸர்வ ஜந் துக்களுடைய மாமிஸத்தைத் தின்றும் சண்டாள ஸ்திரீயைமண ஞ் செய்து கொண்டும் இப்படிக் கெட்ட நடவடிக்கையிலேயே வெகு நாள் கழித்து வந்தான். இப்படிப்பட்ட துஷ்ட காரியத்தை இவ்வேடன் செய்கிற போது இருபத்தோராயிரம் வருஷம் மழை யில்லாமல் நதிகளெல்லாம் வறண்டு, காடுகளெல்லாம் எரிந்து இவ்விதம் உலக முழுமையும் ஜனங்களில்லாமல் போய் விட்டது. இப்படி இருக்கிற நாளில் அவ்வேடன் ஒரு நாள் தனக்கு ஆகா ரம் கிடைக்காமல் எங்கும் அலேந்து திரிந்து மிக்க பசியுடையவ னுப் வீடு சேர்ந்து கிழவனுன தனது தகப்பனேக் கொன்று பக்வம் செய்து புஜித்தான். மறுநாள் தாயையும் அடுத்த நாள் தன் மனேவியையும் கொன்று தின்று வந்தான். இப்படி வரிசை யாய் பிள்ளேயையும் பெண்களேயும் கொன்று தின்றபிறகு பயங்க ரமான வனத்தை அடைந்து அவ்விடத்தில் தப்பித் தவறிவருகிற மனிதர்களேயும்கொன்று தின்று வந்தான். அவனுல்கொல்லப்பட்ட மனிதர்களே யாகிலும்பசுமுதலிய ஜந்துக்களேயாகிலும் கணக்கிட முடியாது. மிகவும் ஆச்சரியப்படக்கூடியதா யிருக்கிற பாபங்க

ளையே செய்து வந்தான். ஒரு நாள் வேட்டைக்காக வெளியில் புறப்பட்டுப் போய்த் திரிகிற போது ஒரு மலையினுடைய குகையிலிருந்து மிக்க பசியுடைய ஒரு சிங்கம் கர்ஜனை செய்துகொண்டு வெளியில் வந்தது. அதைக் கண்டவுடனே இன்றைக்கு நமக்கு ஆகாரம் கிடைத்தது என்று அதனருகே போய்ப் பாணத்தினால் அதை அடித்தான். அந்த அடியினால் மிக்கசினம்கொண்டதாய் இவனைவிட மிகப்பசியுடையதாகையால் அந்தச் சிங்கம் உடனே இவன்மேல் பாய்ந்து இவனைக்கொன்றது. இவன் கீழே விழுந்ததும் துளஸிக் காட்டிலிருந்து காற்று வீசியதால் அந்தக்காற்று இவன்மேலும்பட்டது. உடனே யமதூதர்கள் மிக்க பயங்கரமான முகமுடையவர்களாய் ஓடிவந்து இந்தப் பாபியைப் பிடியுங்கோள் அடியுங்கோள் என்று சொல்லிக்கொண்டே இவனைத் தங்களுடைய பாசங்களினால் கட்டித் தலைகீழாக இழுத்தார்கள். இதற்குள்ளாக விஷ்ணுதூதர்கள் சங்குசக்ரதாரிகளாய் நிர்மலமான மனதுடையவர்களாய் எமதூதர்களிடம் வந்து ஓ தூதர்களே! இப்புண்ணியாத்மாவை உங்களுடைய கட்டிலிருந்தும் விடுவியுங்கள். இவன் விஷ்ணுபக்தன், இவனை விடுங்கள் என்று சொல்ல உடனே இவனை விடுவித்து ஒருவர்க்கொருவர் யுத்தம் செய்யத் தொடங்கினார்கள். இப்படி இருதிறத்தாரும் யுத்தம்செய்யும்போது யமதூதர்கள் அபஜயமடைந்து யமதர்மராஜனிடத்திற் சென்று ஆதிபோடந்தமாய் நடந்த சங்கதிகளைச் சொன்னார்கள். ஸபையில் இவ்வார்த்தையைக் கேட்ட யமன் சித்திர குப்தனைக் கூப்பிட்டு அவ்வேடனுடைய சரித்ரத்தைக் கேட்கலானான். அச்சித்ரகுப்தனும் பத்திரிகையை முழுதும் ஆராய்ந்து பார்த்து இவன்கொஞ்சமேனும் புண்ணியம் செய்யவேயில்லை என்றான். இப்படிப்பட்டவனுக்கு மோக்ஷம் எப்படி கிடைத்தது. பாபிகள்கூட மோக்ஷத்தையும் ஸ்வர்க்கத்தையும் அடைந்தால் நான் இந்த லோகத்தில் அதிகாரம்பெற்றிருப்பது விபர்த்தமாய் விடுகிறதே. என்றிப்படி ஆலோசித்து முடிவில் சித்ரகுப்தன் முதலான தன் பரிவாரங்களுடன் வைகுந்தம் போய் அவ்விடத்தில் அநேக தேவஸ்த்ரீகளுடன் பாரிஜாத விருக்ஷத்தினிடத்தில் க்ரீடைசெய்கிற தேவர்களினால் ஸேவிக்கப் பட்டவராயும் திக்குப்பாலகர்களால் ஸேவிக்கப்பட்டவராயும் ஆசாரியகடாக்ஷம் பெற்றவர்களால் ஸேவிக்கப்பட்டவராயும் இப்போதும் அவ்விடத்தில் தபஸ் செய்கிற மஹருஷிகளால் ஸேவிதராயுமுள்ள ஸ்ரீபகவான் எழுந்தருளிய வைகுண்டத்தை

அடைந்து பகவானுடைய ஸன்னிதி காவற்காரனை சண்டனென் பவனைப் பார்த்துத் தன் வரவைப் பகவானிடத்தில் சொல்லும்படி கேட்டுக்கொண்டான். பிறகு பகவானுல் உத்தரவு பண்ணப்பட்ட வனுய்ப் பகவானுடைய ஸன்னிதானத்திற் பிரவேசித்து ஸ்படிகக் கற்களினு லிழைக்கப்பட்ட மண்டபத்தில் ஸ்ரீதேவியுடனும் பூதே வியுடனும் வீற்றிருந்து பரிஜனங்களினல் வெண்சாமரம் போடப் பட்டவராயும் சங்கு சக்ரதாரியாயும் இந்திரநீலக்கற்களினுல்நிறை ந்த ஸ்தாநத்தை யுடையவராயும் கல்பக வ்ருக்ஷ புஷ்பங் களால் அலங்கரிக்கப்பட்டவராயும் தாமரைக்கண்ணராயு மிருக் கிற லக்ஷ்மீபதியை ஸாஷ்டாங்க வந்தனம்செய்து ஸ்தோத்திரம் செய்யலானுன்.

ஓ லக்ஷ்மீ நாயகனே! இஷ்டார்த்த ஸித்தியைத் தருகிற கல் பகவிருக்ஷமே! வேதவேதாங்கங்களினுலும் அறியக்கூடாதவனே! காளமேகம் போன்ற திருமேனியையுடையவனே! ஸத்ய ஸ்வரூ பனே! ஸகலப்ராணிகளையும் ரக்ஷிப்பதில் மிக்க பிரிய முடையவ னே! ஜங்கமஸ்தாவரரூபமான ஸகலலோகங்களையும் காப்பாற்று வதில் மிக்கவல்லமையுடையவனே! இந்திராதி தேவர்களால் வணங்கப்பட்ட திருவடிகளை யுடையவனே! ஓ ஸ்வாமின்! என் னிடத்தில் மிக்க கிருபை கூரவேணுமென்று மிகவும் வணக்கத் துடன் ஸ்தோத்திரம் செய்தான். இப்படி ஸ்தோத்திரம்செய்து வணங்கின யமதர்மராஜனைப் பார்த்துக் கருணாநிதியான பகவான் நீ எக்காரணத்தை முன்னிட்டு வந்தாயோ அதைச் சொல் லென்று கூற, யமதர்மராஜன் தான் வந்த காரியத்தை யுரைக்க லானுன். ஓ ஸ்வாமின்! தேவரீரால்கொடுக்கப்பட்ட இந்த என் னுடைய அதிகாரத்திற்குக் குறைவு வந்துவிட்டது. ஏனென்றுல், பாபிஷ்டர்களும் செய்த நன்றி மறந்தவர்களும் கூட வைகுண்ட பதவியை அடைகிறுர்கள். அப்படிப்பட்டவர்களைச் சிக்ஷிப்பதற் காக நானிவ் வதிகாரத்தில் நியமிக்கப்பட்டேன்.

அவ்விதமிருக்க இப்போது தாய் தந்தை பிள்ளைமுதலானவர் களையும் ப்ராமணர்களையும் பசுக்களையும் ஸ்திரீகளையும் கொன்ற பௌண்ட்ரக னென்கிற வேடனை என்னுடைய தூதர்கள் பாசத் தினுல் கட்டிக்கொண்டு வரும் வழியில் தேவரீருடைய தூதர்களா லப்பாசத்தினின்றும் விடுபட்டு அவன் இவ்விடம் கொண்டுவரப்

பட்டான். இவனுக்குக் கொஞ்ச மேனும் புண்ணியமே கிடையாது. இப்படிப்பட்டபாபியை இவ்விடம் கொண்டுவந்தபடியால் என்னுடைய வதிகாரத்திற்கு மிகவும் குறைவுவந்து விட்டதென்று விக்கிபாபகம் செய்து கொண்டான்.

அதற்குப் பகவானவனைநோக்கி ஓ மகாபராக்கிரம சாலியான யமதர்மராஜனே! இப்போது உன்னல் சொல்லப்பட்ட இந்தப் பௌண்ட்ரகன் மிகவும் பாபிஷ்டன் என்பதில் சிறிதும் ஸந்தேகமில்லை. இவன் செய்யாத பாபமேகிடையாது. இப்படிப்பட்டவன் ரௌரவம் முதலான நரகங்களை அனுபவிக்கவேண்டியது கடமைதான். இப்படி இவன் பாபியாயிருந்தாலும் முன்ஜன்மத்தில் செய்த புண்ணிய வசத்தாலும் முடிவில் ப்ராணவியோக மானபோது துளஸீகாட்டினின்றும் வந்தகாற்றுஇவன்மேல் வீசினபடியாலும் ஒழிக்கப்பட்ட பாபமுடையவனுப் உன்னுடைய தூதர்கள் கட்டிக்கொண்டு வரும்போது என்னுடைய ஆஞ்ஞையைச் சிரமேற் கொண்ட தூதர்களால் இவ்விடம் கொண்டு வரப்பட்டான். ஆகிலும் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேள்; எவனொருவன் துளஸீ தேவியைக் காப்பாற்றுகிறானே, மனதினுல் நினைக்கிறானே, கண்களினுல் பார்க்கிறானே, அவன் எப்படிப்பட்டபாபம் செய்திருந்தாலும் அந்த க்ஷணமே அவை போய்விடுகின்றன. அத்துளஸியைச் சாப்பிட்டவனுக்கு இவ்வளவுதான் பலனென்றுசொல்லவே முடியாது. துளஸீகாட்டினுடைய காற்று எந்த இடத்தில் படுகிறதோ அந்த இடத்திலிருப்பவர்கள் கொடிய பாபிகளாயினும் அந்தப்பாபங்களைப் போக்கடித்துக் கொண்டவர்களாகிறார்கள். மனிதராகப் பிறந்து எவர்கள் துளஸீதேவியைப் பூசைசெய்பவில்லையோ? அவர்களுக்கும் விருக்ஷங்களுக்கும் பேதமேகிடையாது. துளஸீயை நினைக்கிறவர்களிடத்திலும், துளஸீதளத்தைச் சாப்பிடுகிறவரிடத்திலும் துளஸீயைக் காப்பாற்றுகிறவரிடத்திலும், துளஸீமணிமாலையை அணிந்தவர்களிடத்திலும், துளஸீகாற்றின்பரிசம் பெற்ற தேகமுடையவரிடத்திலும் உன்னுடைய தூதர்கள் ப்ரவேசிக்க இடமேகிடையாது. பிறந்தது முதல் முடிவுவரையில் எப்படிப்பட்ட பாபத்தைச் செய்தவனுனாலும் துளஸீகாற்று பட்டமாத்திரத்தினுலே அவன் என்னுடைய ஸ்தானதத்தையே அடைவான். யாவனொருவன் துளஸீதேவியைப்பார்த்துப் பூஜை செய்யாமலும்

வணங்காமலும் இருக்கிருனே அவனையே நீ சிக்ஷிக்க வேண்டியது. ஒருவன் துளஸீதேவியைப் பூஜிக்கும்போதும் ஸ்தோத்திரம் செய்யும்போதும் எவனொருவன் அவனைப் பரிஹாஸம் செய்கிருனே அப்படிப்பட்ட மஹாபாபியையே நீ சிக்ஷிக்க வேண்டியது. எவனொருவன் துளஸீயைக் கால்களினுல் தாண்டுகிருனே அப்படிப்பட்டபாபிஷ்டர்களையும் நீ தண்டனை செய். ஆகையினுல் ஓ சூரிய புத்திரனுன எமதர்ம ராஜனே! சீக்கிரம் உன்னுடைய பட்டணம் சென்று முன்போல் உன்னுடைய ஸ்தானத்திலிருந்து கொண்டு அதிகாரத்தை நடத்திவா வென்று கட்டளை செய்தார்.

உடனே யமதர்மராஜனும் தன் ஸ்தானத்திற்குப் போய்த் தன்னதிகாரத்தைச் சரியாய் முன்போல் செலுத்திவந்தான். ஆகையினுல், எப்படிப்பட்ட பிரம்மஹத்தி முதலியபாபங்கள் செய்தவர்களாயினும் துளஸீகாற்று சரீரத்தில் பட்டமாத்திரத்தவர்கள் அப்பாபங்கள் ஒழிந்து முத்தியை அடைகிருர்கள்'' என்று பிரகலாதாழ்வான் பின்னுஞ் சொல்லலுற்ருர்.

ஸ்காந்த புராணத்தில் துளஸீமாஹாத்மியத்தில்
பௌண்ட்ரகனுடைய சரித்திரமான நான்காவது அத்தியாயம்
சம்பூரணம்.



## ஐந்தாவது அத்தியாயம்.



பிரகலாதாழ்வான் கூற்று:—''உலகத்தில் எவர்கள் துளஸீயை வைத்துவளர்க்கிருர்களோ அவர்கள் எப்படிப்பட்டகோஹத்திகள் செய்திருந்தாலும் அப்பாபத்தைப் போக்கடித்துக் கொண்டு முடிவில் நற்கதியை அடைகிருர்கள். அதற்குத்திருஷ்டாந்தமாக வொரு கதை சொல்லுகிறேன்கேளும். ஒருகாலத்தில் கைலாஸ பர்வதத்தினுச்சியில் அனேகமான மல்லிகை, முல்லை முதலிய கொடிகளினுலும் இன்னும் பலவித புஷ்பச்செடிகளாலும் நிறைக்கப்பட்டதும் கோகிலங்கள், மயில்கள், கிளிகள், புருக்கள் முதலான பக்ஷிகளின் த்வனிகளினுல் மூடப்பட்டதுமான உன்னத ஸ்தானத்தில் பரமேஸ்வரன் பார்வதியுடன் வாஸம் செய்து வருகிற நாளில் ஒருநாள் அவர் தனிமையாய் மல்லிகைக்கொடியால் கட்டப்பட்ட

மண்டபத்தில் உல்லாஸமாக வமைத்திருக்கிற சலவைக்கல்லின் மேல் உட்கார்ந்திருந்தார். பார்வதியும் நாயகனுக்குத் தெரியாமல் அவரைப் பின்தொடர்ந்து சந்தடி செய்யாமல் மெதுவாகப்பின்புறமாய்ப் போய்த் தன்னிருகையினாலும் விளையாட்டாக நாயகனுடைய இருகண்களையும் மூடினாள். உலகத்திற்குச் சந்திர ஸூர்யர் போன்ற கண்களை மூடியவுடனே சந்திர ஸூர்யமண்டலங்களிரு ளடைந்து பூமண்டலம் முழுமையும் ஒரே இருள் மயமானதால் பசு பக்ஷிகளெல்லாம் நாசமடையவும் ஜீவர்கள் தங்கள் தங்கள் க்ரியைகளை விட்டு விடவும் நேரிட்டன. இவ்விதமாக ஆறுயுகங்களாயின. இப்படி ஆறுயுகங்களாயும் அக்காலம் பார்வதிக்கு மாத்திரம் ஒரு க்ஷணம் போலிருந்தது. உடனே தேவர்களெல்லோரும் ருத்ரமூர்த்தியை ஸ்தோத்திரம் செய்தார்கள். பரமன் தன்னுடைய மூன்றுவது கண்ணான நெற்றிக் கண்ணைத்திறந்தார். அதனால் உலகமானது கொஞ்சம் தெளிவடைந்தது.

உடனே பார்வதி தனது கைகளை எடுத்துவிட்டாள். பரமேச்வரன் திரும்பிப்பார்த்து ஓ நாயகியே! என்ன நீ மிகவும் கொடியதான காரியத்தைச் செய்தாய். என்னுடைய இரண்டு கண்களையும் நீ மூடவே உலகத்தில் அநேக ஜந்துக் களுக்கு நாசமும் சேதனர்களுடைய கர்மங்களுக்கு நாசமும் ஏற்பட்டபடியால் நீ கொடிய பாவத்தை ஸம்பாதித்தவளானுய். இப்பாபத்திற்குத்தகுந்த பரிகாரஞ் செய்தால் தான் அது நிவர்த்தியாகும். அதிலும் ஜந்துக்களுடைய ஹிம்ஸை அதிகமாய் ஏற்பட்டபடியால் அவஸ்யம் பிராய்ச்சித்தம் செய்துகொள்ள வேண்டுமென்று சொன்னர். இவ்வார்த்தையைக் கேட்ட பார்வதி நாக்கும் உதடும் வறண்டவளாயும் முகம் வாடினவளாயும் நாம் என்ன இக்கொடிய பாபத்தைச் செய்தோம் என்று வருந்தினள்.

பின்னர் இதற்குத்தகுந்த பரிகாரம் யாதென்று ஆலோசித்து நாயகனைப் பார்த்து ஓ சுவாமின்! இப்படி என்னுல் தெரியாமல் செய்த பாபத்திற்கு என்ன பரிகாரஞ் செய்யவேண்டும். இவ்விஷயத்தை என்னிடத்தில் கிருபைகூர்ந்து அருளிச்செய்து இப்பாபத்திலிருந்தும் என்னை விடுவிக்கும் படியாய்க் கேட்டுக்கொள்கிறேன் என்றுள். அதற்கு ருத்ரன் ஓ நாயகி! யாவனொருவன் பாபத்தைச் செய்கிறுனே அவனுக்குப் பிராயச்சித்தத்தைச் சொல்லு

கிறேன் கேட்கக்கடவாய். அந்தப் பாபிஷ்டன் துளஸி தேவியைப் பூஜை செய்வானானால் நிச்சயமாய்ப் பாபத்திலிருந்தும் விடுபடு கிறான் என்பதில் சந்தேகமே இல்லை. பாபத்தைப் போக்கடிக்கிற விஷயத்தில் துளஸி தேவியைத் தவிர வேறு பெருந்துணை கிடையாது. ஆகையால் நீ கர்ம பூமியான பூலோகத்தையடைந்து ஸத்ய விரத க்ஷேத்திரமென்னும் காஞ்சீபுரியில் விரதமநுஷ்டிக்கக் கடவாய். அப்பட்டணமானது, 'க' என்கிற பிரமனால் பூஜிக்கப் பட்டபடியால் காஞ்சீ என்று பெயருடையதாயிற்று. அந்தப் பட்டணத்தில் ஸாக்ஷாத் வைகுண்ட வாஸனான பகவான் வரதராஜனென்னும் திருநாமமுடையவராய் விளங்குகிறார். அவருடைய சன்னிதியில் துளஸீ தேவியைவைத்து வளர்த்து நான்கு மாதம் தேனாலும், ஐந்து மாதம் பாலினாலும், ஒரு மாதம் இளநீரினாலும், இரண்டு மாதம் கருப்பஞ் சாற்றினாலும் அபிஷேகம் செய்து பூஜித்தாயேயானால், அதினால் அத்தேவி த்ருப்தி யுடையவளாய்ப் பிரசன்னமாகிஉன்னுடையபாபத்தையும் போக்கடித்து எனக்கு ஸமமான சுப்ரமண்ணியனென்னும் பெயருடைய ஒரு குழந்தையையும் கொடுத்தருள்வாள். அத்துளஸீ பூஜையால் மிகவும் சந்தோஷ மடைந்து நான் உனக்கு ஸேவை கொடுத்து வருகிற பங்குனி மாஸம் பௌர்ணமைய தினம் உன்னைக் கைபற்றிக் கொள்ளுகிறேன். உடனே என்னுடைய அம்சமாய் ஸுப்ர மண்ணியன் என்கிற புத்ரன் ஆறு முகத்துடன் கூடினவனாய் உன்னிடத்தில் ஜனிக்கப் போகிறான்; ஆகையினால் நீ அந்தப்பட்டணத்தை அடைந்து நான் சொன்ன பூஜையைச் செய் யென்று சொல்லி விட்டு அந்தர்த்தானமாயினார்.

உடனே பார்வதியும் காஞ்சீபுரியை அடைந்து வரதராஜப் பெருமாள்ஸன்னிதியில் புண்ணிய கோடிவிமானத்தருகில் கம்பை என்கிற நதிக்கரையில் ஒரு மண்டப மியற்றி அவ்விடத்தில்துளஸீ வன முண்டுபண்ணித் தினந்தோறும் பரிசுத்த மனதுடையவளாய், பால் முதலியவைகளால் துளஸீ தேவியை அபிஷேகம் புரிந்துகொண்டு அன்னதானத்தை விசேஷமாகச் செய்து அதுகாரணத்தால் அன்ன பூரணி என்னும் பெயரை அடைந்து ஒரு துளஸி இதழ்கள் கூட வாடாமல் மஹாபக்தியுடன் காப்பாற்றி வந்தாள். அது பற்றி காமாக்ஷியான இவளுக்கு அபர்ணா என்கிற பெயரும்

வந்தது. இப்படி தினந்தோறும் பால் முதலியவைகளால் அபி ஷேகம் செய்து வந்தனள். மிகவும் பரிசுத்த மனமுடையவளான அந்த நாயகியின்முன் ஒருநாள் துளஸிதேவி ப்ரத்யக்ஷமாகி அவ ளைக் கடாக்ஷித்து ஹிமய மலைக்குப் பெண்ணாகிய பார்வதியே! நீ என்னை மிக்க அன்புடன்பூஜித்து வந்து, என்னுடையஇதழ்களைப் புஜித்தபடியால் உன்னுடைய பாபங்கள் முழுமையும் போய் விட் டன. பிறந்த மனிதர் சாகிறதற்குள்ளாக ஒரு தடவை என்னிதழ் களைப்புஜிப்பாரே யாகில் அவருடைய பாபங்கள் நாசமாகி விடு கின்றன. ஆகையால் எழுந்திருந்து உனதிருப்பிடமான கைலாஸ கிரிக்குப் போகக்கடவாய். உனது பாபம்போ யொழிவது மன்றி உன்னுடைய பதிக்கு ஸமானமான புத்திரனையும் உனக்களித் தேன். ஆகையால் உன திருப்பிடம் போவென்று சொல்லி விட்டு மறைந்து போய் விட்டாள். பிறகு சிவனும் சந்தோஷமடைந்த வராய் முன்குறிக்கப்பட்ட பங்குனி மாதம் பௌர்ணமி தினம் காஞ்சி நகரம் வந்து பார்வதியின் கையைப் பிடித்துக் கொண்டு தன்னுடைய வாகனமாகிய வ்ருஷபத்தின்மீதேறிக் கைலாஸ பர்வ தம் போய் முன் போலவே சுகமாகவிருந்தார். பார்வதியும் பாபம் போகிறதற்காகத் துளஸீ பூஜையைப்புரிந்து வந்ததினால், நாமும் அப்பூஜைசெய்து வந்தால் புத்திர பௌத்ரர்களுடன் இவ்விடத் தில் நல்ல போகங்களை அனுபவித்து முடிவில் மோக்ஷ ஸாம்ராஜ்ய த்தை அடையலாம்" என்று மொழிந்தருளினர்.

ஸ்காந்த புராணத்தில் பார்வதி ருத்ர ஸம்வாதத்தில் பார் வதிவரம் பெற்ற

ஐந்தாவது அத்திபாயம் சம் பூரணம்.



## ஆறாவது அத்தியாயம்.



பிரகலாதாழ்வான் பின்னுஞ்சொல்லுவது:—" ஓ பூஸுரத னே! ஒருகாலத்தில் மஹாதபஸியான தூர்வாஸ மஹர்ஷி ப்ரும்ம லோகம் போகவேண்டுமென்று கருதிப் போனர். அவ்விடத்தில் அனேக மஹர்ஷிகள் நிறைந்திருக்கின்ற ஸபையில் ப்ரும்ம தேவ ரானவர் தன்னுடைய நாயகியான ஸரஸ்வதியுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்தபடியால் மஹர்ஷி வந்ததைக்கவனிக்கவே யில்லை; மரியாதையும் செய்யவில்லை. இதனால் மஹர்ஷிக்குக்

கோபம் பிறந்து பிரமதேவனைப்பார்த்து உமக்குப் பகவான் நியமித்திருக்கிற ப்ரஜாசிருஷ்டியில் வல்லமைகுறைபக்கடவது என்று சாபம்கொடுத்தார். இச்சாபத்தை யுணர்ந்த ப்ரும்ம தேவர் மிகவும் நடுங்கினவராய் அந்த ரிஷி யினிடம் வந்து ஓ ஸ்வாமி! எனது பிழையைப் பொறுத்துக் கொள்ளவேண்டும்; இச்சாபத்திலிருந்தும் என்னை விடுவிக்க வேண்டும் என்று ப்ரார்த்திக்க, ரிஷியும் ஓ ப்ரும்ம தேவனே! என்னுடைய இந்தச் சாபம் வீண் போகாது. ஆகையால் நீர் நைமிசாரண்யம் போய்ப் பகவானை ஸ்தோத்ரம் செய்து அதினால் விரும்பும் வரத்தைப் பெற்றுக் கொள்ளும்என்று சொல்லி விட்டுப்போயினர். இவ்வார்த்தையைக் கேட்ட பிரும்ம தேவனும் கடினமான தபஸ் செய்யவாரம்பித்தார். இப்படி ஜநஸ்ருஷ்டி இல்லாமல் தபஸ்செய்கிறபடியால் அதிகமாக ஜனங்கள் நாசமடைவதைப் பார்த்த பகவான் சங்கு சக்ரபாணியாய் ப்ரும்ம தேவர் தபஸ் செய்கிற விடத்திற்குவந்து அவருக்கு ஸேவைஸாதிக்க ப்ரும்மதேவர் பகவானை ஸ்துதிக்கலானர் யோகிகளாலும்பார்க்கமுடியாத ஸ்வரூப முடையவனே! ஸூக்ஷ்மரூபனே! பதினான்கு லோகங்களையும் வயிற்றில் வைத்திருப்பவனே! ஸர்வ மங்களகுண ஸ்வரூபனே! என்னிடத்தில் தயை கூரும். தூர்வாஸ மஹா ரிஷியின் சாபத்திலிருந்தும்விடுவியும்.உம்முடைய மாயையால் என்னுடைய வதிகாரத்திற்கு நாசம் வந்துவிட்டதே. என்ன செய்வேன். உம்மை விட எனக்கு வேறு கதியாரிருக்கிறார்கள் என்று மிகவும் கஷ்டப்படுகிற பிரம்மாவைப் பார்த்துப் பகவான் உரைக்கலானர்.

ஓ சதுர்முகனே! என்னுடைய மாயையைக்கடக்க உன்னாலும் பரமசிவனாலும் மற்ற எவர்களாலும் முடியாது. ஆகையினால் என்னுடைய மாயையினாலுண்டான விச்சாபத்தைப் போக்குவதற்குத் துளஸீ தேவியை த்யானம் செய்யக் கடவாய். அவளுடைய பூஜையைச் செய்தவர்கள் எவ்வித பலனைத்தான் அடைய மாட்டார்கள். பரமசிவனும் த்ரிபுர ஸம்ஹார காலத்தில் யுத்தம் செய்ய முடியாமல் துளஸீ தேவியைப் பூஜித்தே த்ரிபுர ஸம்ஹாரம் செய்தான். ஆதிசேஷனும் துளஸீ பூஜையால் ஸர்ப்ப ராஜாவாகினன். பதினான்கு லோகங்களை வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கிற என்னையும் இந்தப் பூமியையும் சிரசினால் தாங்குகிறான். நான், நீ, பரமசிவன், லக்ஷ்மி, ஸரஸ்வதி, பார்வதி முதலான நாமெல்லோரும் துளஸீ

தேவியை அவசியம் பூஜிக்க வேண்டியதாயிருக்க மற்ற சேதனர்கள் விஷயத்தில் சொல்லவேண்டியதில்லை. ஆகையால் எப்படியும் நீ துளஸீ தேவியைப் பூஜைசெய்தால் அவளிடமிருந்து உன்னுடைய அதிகாரத்திற்கு ஒருவிதக்குறைவும் வாராமலிருக்கும்படியான வார்த்தையடைவாய் என்று சொல்லியருளினர். ப்ரம்மதேவனும் தன்னுடையலோகம் போய் முற்றத்தில் மண்டபமியற்றி அதில் துளஸீதேவியை வைத்துத் தினம் பூஜைசெய்தார். அவ்வாறுசெய்து வந்ததினல் தன்னுடைய அதிகாரத்தை அடைந்தார். எவனுடைய வீட்டின் முற்றத்தில துளஸீதேவியானவள் வாஸம் செய்கிருளோ அந்தக் கிருஹத்திற்குத் தான் கிருஹம் என்று பெயர். மற்ற கிருஹங்கள் மஸானத்திற்கு ஸமானம்.

இதுநிற்க, வாமதேவரென்கிற ரிஷிக்குப் பகவானிடத்தில் மிக்க பக்தியுள்ளவளான சுமாலினி என்றொரு பெண்ணிருந்தாள். அவள் ஒருநாள் தன்னுடைய பிதாவைப் பார்த்து, ஓ பிதாவே! எனக்கு ஸ்ரீமன் நாராயணனிடத்தில் எவ்வளவு பக்தி இருக்கிறதோ அவ்வளவு பக்தி மற்ற தேவர்களிடத்தில் கிடையாது. அப்படிப்பட்ட பக்தியினல் நான் எந்தக்கதியை அடைவேன்; இதையெனக்குத் தெரிவிக்கவேணுமென்று கேட்க, அவ்வார்த்தையைக் கேட்ட முனிவர் ஓ குழந்தாய்! உலகத்தில் புருஷர்களாலும் விசேஷமாய் ஸ்த்ரீகளாலும் துளஸீ தேவியே பூஜிக்கக்கூடியவள். அப்படிப் பட்ட துளஸீதேவியைப் பூஜித்து உத்தமமான மோக்ஷத்தை அடையக் கடவாய் என்று ஆஞ்ஞாபகம் செய்தார். இதைக்கேட்ட ரிஷிகுமாரத்தியும் தன்னுடைய கிரஹத்தின் அங்கண ப்ரதேசத்தில் துளஸீ மண்டபமியற்றித் தினந்தோறும் காலை மாலை இருவேளையிலும் சுத்திசெய்து கோலமிட்டுப்பூக்களாலலங்கரித்துப்பக்தியுடன் பூஜைசெய்து வந்தாள். ஒருநாள் அவளுடைய ஸகோதரர்களான பதினறுபேரும் தகப்பனுடைய நித்திய பூஜைக்காக துளஸீ ஸமித்து தர்ப்பை இவைகளைக் கொண்டு வர வனத்திற்குச் சென்றபோது கௌதம முனியினுடைய ஸ்நாநத்திற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிற குளத்தைக்கண்டு அதில் ஸ்நாநம்செய்து ரொம்பவும் கலக்கிவிட்டார்கள். இச்செய்தி அறிந்த கௌதம ரிஷியும் இவர்களைக் குருடாய்ப் போகக் கடவீர்கள் என்று சாபமிட்டார். இச்சாபத்தை அடைந்த

இவர்கள் கண்கள் தெரியாமல் காடு முழுமையும் அலைந்து திரிந்து காட்டிலிருக்கிற முட்கள் காலில் தைக்கக் கடைசியாகத் தங்களுடைய ஆச்ரம ஸமீபம் வந்து சேர்ந்தார்கள். இத்தனை நாள் பிள்ளைகள் வராமலிருந்ததைக் கண்ட மஹரிஷி கௌதமருடைய தபோமகிமையினால் தமது புத்திரர்கள் அந்தகர்களானார்களென்று தெரிந்தவராய்மிகவுந்துக்கிதரானார். இப்படி வருத்தப்படுகிற பிதாவைப்பார்த்த பெண்ணான ஸுமாலினி தன் தகப்பனாரைத் தேறுதல் செய்து பகவத் பூஜை செய்யச் சொல்லித் தானும் துளஸீ மண்டபத்தினருகிற் சென்று தன்னுடைய ஸகோதரர்களின் சாபத்தைப்போக்கும் பொருட்டுத்துளஸிதேவியைப் பூஜை செய்தாள். உடனே துளஸி தேவியும் பிரஸன்னமாகி ரிஷிபுத்திரர்களுடைய கண்கள்தெரியும்படி செய்தாள். அவர்கள் ஸமித் தர்ப்பை இவைகளுடன் தங்கள் பிதாவைச் சேவித்தார்கள். சாபமிட்ட கௌதமரும் ஓ ஹோ! என்ன நாம் தெரியாமல் சாபமிட்டோமே என்று அந்த ரிஷிபுத்திரர்களைச் சாப்பிடச்செய்வதற்காகத் தேடவாரம்பித்தார்.எங்கும்தேடி அகப்படாமையால் தமது ஞானக்கண்ணால் அவர்கள் சாபவிமோசனமடைந்ததை அறிந்து மறுநாளுதயத்தில் வாமதேவ முனிவரின்ஆச்ரமம்போனார். கௌதமர்வரவைக் கண்டவாமதேவரும் அர்க்யம் முதலானவைகளினால் கௌதமரைப் பூஜித்து அவரை நல்வரவு கேட்கலானார். அதற்குக் கௌதமரும் ஓ ஸ்வாமி! தேவரீரது குமாரத்தியினுடைய ப்ரபாவத்தையும் துளஸி பூஜையையும் பார்க்கிறதற்காக வந்தேன். உமது குமாரத்தியைப் பார்த்தமாத்திரத்தினாலே மிகவும் பரிசுத்தனாகினேன். இனி என்னுடைய ஆச்ரமம் போகிறேனென்று உத்தரவுபெற்றுத் தமதாச்ரமம் போயினர். துளஸி தேவியின் பூஜா மாஹாத்மியத்தையுணர்ந்த கௌதமர் தமது ஆச்ரமம் போனதும் தம்முடைய பத்தினியோடும் பிள்ளைகளுடனும் ஆச்ரமத்தின் முற்றத்தில் ஒரு மண்டபம் நிர்மித்து அதில் துளஸிதேவியை வைத்துப் பூஜைசெய்துவந்தார். ஆகையால் எப்படியாவது பண்டிதர்களும் துளஸி தேவியைப் பூஜைசெய்யவேண்டியது. அந்தப்பூஜையினால் இஷ்டமானவரத்தை அத்தேவி கொடுத்தருள்வாளென்பதில் சந்தேகமில்லை'' என்றருளினர்.

ஸ்காந்த புராணத்தில் வாமதேவ ரிஷிபுத்ரியைப்பற்றிய
ஆறாவது அத்தியாயம் சம்பூரணம்.



## ஏழாவது அத்தியாயம்.

பிரகலாதாழ்வரான் கூற்று:-"முன்னொருகாலத்தில் ஸுஷேண னென்றொரு அரசன் உரகமென்கிற பட்டணத்தில் ராஜ்யபாரம் செய்துவந்தான். அவனுக்கு வஸுஸேனை என்றொரு தேவியிருந் தாள். அவளிடத்தில் மிக்க ரூபலாவண்யத்துடன் மெலிந்த இடுப் பும் மல்லிகை மொட்டைப்பழிக்கும் தந்தபந்திகளும் மயில்தோகை யைவென்ற கூந்தலும் வாழைத்தண்டுபோன்ற தொடைகளும் உடையவளாய்த் தனதுற்பத்தியால் நான்முகனுக்குப் பெருமை யுண்டுபண்ணினவளாய்க் கோவைப்பழம்போன்ற உதடுகளோடு சிவந்தகண்களைக்கொண்டவளாய், தேவஸேனை என்றொரு பெண் ணிருந்தாள். அவள் தினந்தோறும் காலையிலெழுந்து நித்தியகடன் களை முடித்துக்கொண்டு துளஸிதேவியைப் பூஜித்துவந்தாள். இப் படி செய்துவருகிறநாளில் யவ்வனதசையை அடைந்தாள். அது முதல் பிதாவான ஸுஷேணமஹாராஜன் பெண்ணின் விவாகத் திற்காக ஆலோசனை செய்து ஸ்வயம் வரம் நாட்டி அரசர்களை எல்லாம் வரவழைத்தார்.

பகவானிடத்தில் மிக்க பக்தியுடைவளான ராஜபுத்ரி வந்திரு க்கிற அரசர்களைப்பார்த்து ஓ அரசர்களே! நீங்கள் எல்லோரும் ஸ்வேதத்வீபத்தைப் பார்த்திருக்கிறீர்களா? வென்று கேட்டாள். அதற்கு அரசர்கள் நாங்கள் ஒருபொழுதும் 'பார்த்ததே இல்லை என்று சொன்னார்கள். இதைக்கேட்ட ராஜகுமாரத்தியும் ஆனால் நீங்கள் எல்லோரும் வந்தவழியைப் பார்த்துக்கொண்டு தங்கள் தங்களுடைய நகரம்போய்ச் சேரலாமென்று சொன்னாள். உடனே ராஜகன்னிகையின்மேல் காதல்கொண்டுவந்த அரசர்களெல்லாரும் வெட்கித் தலைகுனிந்து அவரவர்கள் ராஜ்யம் போய்ச்சேர்ந்தார் கள். அத்தருணத்தில் இச்செய்தி அறிந்த தேவதத்தனென்கிற ஒரு ப்ராமணன்தான் ஸ்வேதத்வீபம்போய் அவ்விடத்திய விசே ஷங்களைப்பார்த்ததாகச்சொல்லி அப்பெண்ணை விவாஹம் செய்து கொள்ளலாம் என்று தனக்குள்ளாலோசித்து அப்பட்டணம் வந்து அந்நகரத்தரசனுடைய அனுமதியினால் கன்னிகையிருக்கிற விடம்சென்று ராஜகன்னிகையைப்பார்த்து ஓ ராஜகன்னிகையே! நான் ஸ்வேதத்வீபத்தைப் பார்த்திருக்கிறேன். அவ்விடத்தில் பக வான் அனேகமான ரிஷிகளாலும் தேவதாஸ்த்ரீகளாலும் இந்திரா

திதேவர்களாலும் தனக்குவாகனமான பக்ஷி ராஜனுலும் எப்பொழுதும் வணங்கப்பட்ட திருவடியுடையவராய் ஸேவைஸாதிக்கிருர் என்று சொன்ஞன். இவ்வார்த்தையைக் கேட்ட ராஜகன்னிகையும் தனது தோழிகளைக் கூப்பிட்டு ஓ சகிகளே! இவ்விப்ரனைச் சாட்டையினல் நன்ருய் அடியுங்க ளென்று கட்டளையிட்டாள்.

உடனே அவன் இவர்களால் அடிக்கப்பட்டு மயிரைப்பிடித்திழுத்து வெளியில் தள்ளப்பட்டான். பிறகு அவன் அடிபொறுக்க முடியாமையாலும் அவமானத்தினுலும் வெட்கித் தனக்குள் ஓர் ஆலோசனை செய்யலானுன்.

இனி நாம் ஸ்வேதத்வீபத்தைப் பார்க்காமல் மறுகாரியம் செய்வதில்லை என்று நிச்சயித்துக்கொண்டு மஹேந்திரபர்வதம் சென்று அவ்விடத்தில் தபஸ் செய்து கொண்டிருக்கிற பகவதவதாரமானபரசுராமரைக்கண்டு ஓ ஸ்வாமின்! அடியேனுக்கு ஸ்வேதத்வீபத்தின் மஹிமையைச் சொல்லவேண்டுமென்றுவணங்கி நின்ற தேவதத்தனைப்பார்த்து அவர் அப்பா எனக்கதன்மஹிமை தெரியாது. பதரிகாச்ரமம் போனுல் அங்கு ரிஷிகள் பகவத்பக்தியுடையவர்களாயும் ஸ்வேததீபத்தின் மஹிமையை நேரில் பார்த்தவர்களாயும் வாஸம்பண்ணுகிருர்கள். அவர்களிடம் போனுல் ஸகலமும் தெரிந்துகொள்ளலாம் என்று சொன்ஞர். அதைக் கேட்ட அவ்வந்தணன் பதரிகாச்ரமம் சென்று அங்குத் தபஸ்செய்கிறமுனிவர்களைக்கண்டு வினயத்துடன் ஸ்வேதத்வீபத்தின் மஹிமையை அடியேனுக்கு விசிதமாய் உரைக்கவேணுமென்று வேண்டிக்கொண்டான்.

அவ்வார்த்தையைக் கேட்ட மஹாரிஷிகளும், ஓ ப்ராமணனே! நீ இச்சரீரத்துடன் அந்தத்வீபத்திற்குப் போகமுடியாது. துளஸி தேவியின் மஹாத்மியத்தினுல் தான் அவ்விடம்போகலாம். அத்தேவியின் மஹாத்மியத்தை எங்களாலும் சொல்லமுடியாது. இவ்விடத்தில் த்ரிதர் என்கிற முனிவர் ஒருவரிருக்கிருர். அவரால்தான் அத்துளஸியின் மஹிமை சொல்லமுடியும். ஆகையால் அவரிடம் போகக்கடவாய் என்று சொல்லிவிட்டார்கள்.

அதைக்கேட்ட அவ்வந்தணன் அம்முனிவரிடம்போய்த்தன் வரவைத் தெரிவித்துக் கொண்டான். அவ்வார்த்தையைக் கேட்டு முனிவரும் ஓ அந்தணனே! நீ தினந்தோறும் உனது கிருஹத்தில்

மண்டபமியற்றி அதில் துளஸிதேவியை வைத்துப் பூஜித்து வந்தாயேயானல் அவளுடைய அனுக்கிரஹத்தினல் இச்சரீரத்துடன் அந்தத்வீபத்தை அடைவாய் என்று சொல்லிமுடித்தார். உடனே அவன் அம்முனிவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு பதரிகாச்சிரமத்தில் துளஸிமண்டப மொன்றியற்றித் துளஸிதேவியைப் பூஜைசெய்துவந்தான். இப்படிபனிரண்டுவருஷம் பூசை செய்கிறபோது துளஸிதேவி பிரசன்னமாய் ஓ ப்ராமணனே! உனது பூஜைக்குச் சந்தோஷமடைந்தேன்; இனி நீ ஸ்வேதத்வீபம் போகக்கடவாய் என்று வரம்கொடுத்து மறைந்துவிட்டாள். இவ்வரத்தைப்பெற்றஅவ்வந்தணன் மறுபடியும் நன்றாய்ப் பூஜைசெய்தான்.

இப்படிபூஜைசெய்யும் தருணத்தில் அவ்வாச்ரமத்திற்குச்சமீபமாய் ஒருபெரிய சர்ப்பம்வந்தது. அதைக்கண்ட ரிஷிகள் மிகவும் பயந்து ஓடித் தங்களுடைய ஆச்ரமத்தில்மறைந்துகொண்டார்கள். அவ்வந்தணனும் ஒரு மரத்தின் பொந்தில் மறைந்து கொண்டான். அச்சமயத்தில் ஆகாயத்திலிருந்து மிக்கவேகத்துடன் கருடபகவான் ஓடிவந்து அச்சர்ப்பத்தைத் தனது சிறகுகளால் அறைந்து கொன்றுவிட்டார். இதுகண்ட ரிஷிகள்வந்து கருடபகவானைப்பார்த்து ஸ்வாமி இக்கொடிய சர்ப்பத்தைக்கொன்று இன்று எங்களைக் காப்பாற்றினீரே ; இனி எங்களுக்குப் பயங்கிடையாது என்று தோத்ரம் செய்தார்கள்" என்றருளினர்.

ஸ்ரீபாத்மபுராணத்தில் துளஸி மஹாத்மியத்தில்
கருடதர்சனமென்கிற ஏழாவது அத்தியாயம் சம்பூரணம்.



## எட்டாவது அத்தியாயம்.



மீண்டும் பிரகலாதாழ்வான் சொல்லத்தொடங்கினர்:—"இவ்வாறு ரிஷிகளுக்குத்தரிசனமளித்த கருடபகவான் அவர்களைப்பார்த்து ஓ ரிஷிகளே இனி கொஞ்சமேனும் பயமின்றி உங்களுடைய தபஸ்ஸை அனுஷ்டியுங்கள். உங்களுக்கு க்ஷேமமுண்டாகும் என்றிப்படி சொல்லிக்கொண்டிருக்கும்போது மரத்தின் பொந்திலிருந்த அவ்வந்தணன் கருடபகவான்மேல் வந்தேறினன். உடனே கருடபகவானும் ஆகாயமார்க்கமாய்க்கிளம்பி அனேகபட்டணங்களையும் நதிகளையும் லவணசமுத்திர முதலான ஸமுத்திரங்

களையும் கடந்து செல்லும்போது தேவதத்தன் ஸ்வர்ணமயமான கோட்டைகள் சூழ்ந்தும் வெளுத்த மனிதர்கள் நிறைந்துமுள்ள பகவானுடைய ஆலயத்தைப் பால் சமுத்திரத்தின் மத்தியில்கண்டான். கருடபகவானும் பகவத்ஸன்னிதியை அடைந்தார். அவ்வந்தணன் ஆலயத்தைப் பார்த்ததும் கண்களைமூடிக்கொண்டான். உடனே அம்மூடாத்மா அவ்விடமிருந்தும் பூலோகத்தை அடைந்தவனுய் ஒரு பெரிய உப்பரிக்கையின்மீது வந்து தங்கினுன். அவ்விடத்திலிருக்கப்பட்ட அப்ஸரஸ்த்ரீகளைப்பார்த்ததும் இது யாருடைய கிரகம்என்று வினவினுன். அங்கிருந்தவர்கள் இந்தக்கிரஹம் துளஸிதேவியினுடையது என்று சொன்னுர்கள். அவ்வந்தணனும் தன் வரவைத் தேவியாருக்குத் தெரிவிக்கச் சொன்னுன். அப்படியே அவர்களும் தெரிவிக்க, துளஸி தேவியும் பிராமணனை உள்ளே வரும்படி சொல்லி விடையளிக்க, அவ்வாஞ்ஞையினுல் பிராமணனும் உட்பிரவேசித்து அவ்விடத்தில் முன்தான் பூஜை செய்யும்போது துளஸீதேவியை எவ்விதமாய்ப் பார்த்தானே அவ்விதமே பார்த்து ஆனந்த பரவசனுய்த் தனது விருத்தாந்தத்தைத் தெரிவித்தான். துளஸீதேவியும் அவனுக்குத்தன் வேலைக்காரர்களினுல் போஜனம் செய்விக்க, அவ்விடத்தில் மறித்தவளாய்த் தனது படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிற தேவஸேனையைக் கண்டு விப்பிரன் பேசாமலிருந்தான். துளஸீ தேவி அவனுடைய கண்களை மூடிவிடும்படி வேலைக்காரர்களுக்கு உத்தரவு செய்ய அவர்களும் அப்படியே செய்தார்கள். அத்தேவியின் மகிமையினுல் அவன் முன் சொன்ன உரகபுரிக்கு வந்தான். அவ்விடம் வந்ததும் ஸுஷேணமஹாராஜனிடம் சென்று அவனுடைய பெண்ணுன தேவஸேனையிடம் தான் ஸ்வேதத்வீபம்போய்வந்த சமாச்சாரத்தைச் சொல்லிக்கொண்டான். இதைக்கேட்ட தேவஸேனையும் அந்தத்தேவதத்தனைப் பார்த்து ஓ ஸ்வாமி! ஸ்வேதத்வீபம் எப்படிப்பட்டது என்று வினவ அவ்வந்தணன் மிகவும் பயந்து அத்திபத்தில் துளஸி தேவியின் மண்டபத்தில் உன்னை மறித்தவளாகக் கண்டேன் என்று சொன்னுன். இவ்வார்த்தையைக் கேட்ட தேவஸேனையும் அவ்விடத்திலேயே துளஸி தேவியின் பாதத்தை அடைந்தாள்.

புத்ரியின் தேக வியோகத்தைக் கண்ணுற்ற அரசனும் அவன் மனைவியான வஸுஸேனையும் மிகவும் துக்கத்தை அடைந்

தார்கள். தேவதத்தனும் மிகவருத்தத்துடன் மஹேந்திர பர்வதம் போய் அவ்விடத்தில் தபஸ்வியா யிருக்கிற பரசுராமரைக் கண்டு தன்னுடைய வருத்தத்தைச் சொல்லிக் கொண்டான். அம்மஹாரிஷியும் தனது தபோமகிமையினல் நடந்துள்ள விர்த்தாந்தங்களை அறிந்து கொண்டு சொல்லுகிறூர். ஓ பிராம்மணனே! முற்பிறப்பில் நீ த்ரிதர் என்கிற மஹரிஷிக்குச் சிஷ்யனுகி அம்மஹாரிஷி துளஸீ பூஜை செய்து கொண்டிருக்கும் போது நீயும் அவரிடத்தில் பக்தியுடையவனுயிருந்தாய். அம்மஹாரிஷி துளஸீதேவியைச் சேவிப்பதற்காக ஸ்வேதத்தீபம் சென்றவேளையில் நீயும் போயிருந்தாய். அச்சமயத்தில் அத்துளஸீதேவியின் சமீபத்தில் தேவஸேனையும் இருக்கக்கண்டு நீ அவள் மேல் காதல் கொண்டாய். அவளும் உன்மேல் காதல் கொண்டள். இவ்விருத்தாந்தத்தைத் துளஸீ தேவிபார்த்துக் கொண்டிருந்தாள். ஸ்வேதத்திபம் போய்த் திரும்பி வந்த மஹாரிஷியும் சிஷ்யனுகிய உன்னைச் சாம்பலாகக் கடவாயென்று சபித்தார். அவ்வாறே அந்தத் தேவஸேனையையும் சபித்தார். பின்னர் மஹரிஷியும் நாம் தெரியாமல் சபித்து விட்டோமே என்று துளஸீதேவியைப் பிரார்த்தித்தார். துளஸீதேவியும் ஓ மஹரிஷியே! உன்னுடைய சிஷ்யனுனவன் மறித்தவளான தேவஸேனையை எப்பொழுது பார்க்கிறுனே அப்பொழுது முன்னிருந்த சரீரம் வரும். பிறகுஇவளும் முன்னிருந்த தன் நடவடிக்கையை அறிந்து அதேரூபத்துடன என்னுடைய ஸன்னிதானத்திற்கு வரக்கடவள். உனது சிஷ்யனும் மனுஷ்ய ஜன்மத்தில் பிறந்து இவளைப்பார்க்கப் போகிறுன் என்று சாபவிமோசனம் செய்தாள். இதுபூர்வ விர்த்தாந்தமாகையால் இப்போது த்ரிதர் ரிஷி தன்னுடைய சிஷ்யனிடத்தில் கிருபைவைத்த தேவியைக் குறித்துச் சந்தோஷித்துக் கொண்டு பதரி ஆச்ரமத்தில் தபசு செய்கிறுர். நீ உடனே அந்தப்பதரி ஆச்ரமத்திற்குப் போய் அம்மஹரிஷியைக் கண்டு வணங்கினல் அவருடைய அனுக்கிரகத்தினல் நீ யாவுந்தெரிந்துகொண்டு சுகமடைவாய் என்றனர். இவ்வரலாற்றைக் கேட்ட தேவதத்தனும் அந்தப் பதரி ஆச்ரமம்போய்த்துளஸீதேவியை ஆஹாரமில்லாமல் 12 வருஷம் பூஜைசெய்தான். இப்படி தபஸு செய்கிற நாளில் நாரதமுனிவர் அவ்விடம் வந்து ஓ தேவதத்த! என்று கூப்பிட்டு நான் ஸ்வேதத்திபத்தில் வாசம் செய்கிறவன்; துளஸீதேவியின் ஆக்ஞையினல் உன்னை அழைத்துக் கொண்டு போகவந்திருக்கின்

றேன். ஆகையால் "துளஸீ! ஸ்ரீ ஸசுகயே! பாபஹாரணி! புண்ணியதே! நாரதனுதே! என்னும் இம்மந்த்ரத்தைக் கிருஹித்து க்கொள். தேவவிமானம் வரும் என்று சொன்னர். அந்தணனும் அம்மந்த்ரத்தை வணக்கத்துடன் கிருஹித்துக் கொண்டான். அந்த க்ஷணத்திலேயே ஆகாசவிமானம் வர, அதிலேறி ஸ்வேதத் தீபம் போய்த் துளஸீதேவியை வணங்கி அவ்விடத்தில் தேவ சேனையுயிருடனிருக்கக் கண்டான். துளஸிதேவியின் நியமனத்தி ஞல் தேவதத்தனுக்கும் தேவஸேனைக்கும் விவாகமாக நாரதர் துளஸீதேவியினிடம் விடைபெற்றுக் கொண்டு வைகுண்டம் போய்ச்சேர்ந்தார். தேவதத்தனும் தேவசேனையை அடைந்து அதே சரீரத்தில் துளஸிதேவியைப் பூஜித்து வைகுண்ட பதவி யை அடைந்தான்.

இத்தன்மையாகத் துளஸீதேவியின் பக்தியினாலேதேவதத் தனும் உத்தமமான கதியை யடைந்தான். ஆதலால் துளஸீ பூஜை செய்கிறவன் தர்மார்த்த காமமோக்ஷமென்கிற நான்குவித புருஷார்த்தங்களையு மடைகிறான். யாவனொருவன் இந்தக்கதையை எழுதுகிறானோ படிக்கிறானோ கேட்கிறானோ அவன் இந்த ஜென் மத்தில் சித்திகளை அடைகிறானென்பதில் சந்தேகமில்லை" என்ற ருளிச் செய்தார்.

பாத்ம புராணத்தில் துளஸீ மஹாத்மியத்தில்
தேவதத்தோ பாக்கியானத்தைக்கூறும்
எட்டாவது அத்தியாயம் சம்பூரணம்.



## ஒன்பதாவது அத்தியாயம்.



பிரஹலாதாழ்வார் பின்னுங் கூறுவார்:—"உச்சினிபட்டணத் தில் சாந்தகுணமுடையவனும் உதாரனும் ராஜ்ஜியபாரம் செலு த்திவந்த உதயனன் என்கிற அரசன் ஒருவன் இருந்தான். ஒரு காலத்தில் அவ்வரசன் தன்னுடைய மந்திரிப் பிரதானிகளுடன் தீர்த்த யாத்திரை செய்ய வேண்டுமென்று தன் பத்தினியாகிய சுசீலை சகிதமாய்ப் புறப்பட்டு ரதத்திலேறிக்கொண்டு போகும் வழியில் அனேக ரிஷிகளினால் சூழப்பட்டுத் தபசுசெய்கிற வசிஷ்ட மஹரிஷியைக் கண்டு ரதத்தைவிட்டிறங்கி அவரைச்சேவித்தான்.

மஹரிஷியும் அரசனைப் பார்த்து ஓ ராஜனே! இவ்விடம் வந்தகாரணமென்னவென்று கேட்டார். அரசனதற்கு ஸ்வாமி! எங்களுக்குப் புத்ரபாக்கிய மில்லை; போகத்திலும் ஆசைகிடையாது. ஆகையினல் தீர்த்த யாத்திரை செய்பலாமென்று புறப்பட்டு வந்தோம் என்றான். அதைக்கேட்ட வசிஷ்ட முனிவரும் தீர்த்தயாத்திரை போகவேண்டாம்; ஸந்த்ர வம்ஸத்தில் பிறந்த உனக்கு இனிமேல் யௌவனம் வரப்போகிறது என்று சொன்னர்.

இதைக்கேட்ட அரசனும் சுவாமி எவ்விதம் எனக்கும் என்னுடைய பத்தினிக்கும் யௌவனம் வரக்கூடும் என்று வினவினன். வசிஷ்டர் அதற்கு ஓ அரசனே! சொல்லுகிறேன் கேள். அமிருதம் கடையும் போது அம்ருதத்திலிருந்து உண்டான துளஸீதேவியை நீங்கள் பூஜித்தால் அவளுடைய அனுக்கிரகத்தினல் உங்களுக்கு யௌவனதசை யுண்டாகும். அப்பொழுது உங்களுக்குப் பாதனென்கிற புத்ரன் ஜனிப்பான். அவனல் இந்த வருஷத்திற்குப் பாரத வருஷமென்று பெயர் வரப்போகிறது.உன்னுடைய குலம் விருத்தி யடைகிற விஷயத்தைச் சொல்லுகிறேன் கேள். துளஸீ! ஸ்ரீஸகே! தேவி! புண்யதே! என்னும் மந்திரத்தை உச்சரித்து துளஸீ தேவியை சோடச உபசாரத்தினல் பூஜிக்கக்கடவாய். அத்துளஸீ தளங்களினல் பகவானையும் அர்ச்சிக்கக் கடவாய். நல்லபுண்ணிய தீர்த்தங்களினல் துளஸீ தேவியின் அபிஷேகத் தீர்த்தத்தை உட்கொள்ளவேண்டியது.

அத்தீர்த்தத்தில் மிகுந்த ஜலத்தால் உன்னுடையபத்தினியை ஸ்நானஞ்செய்து வைக்கவேண்டும். துளஸீத்தருக்களை வைத்து நிரம்பவளர்க்கவேண்டும். புண்டரீகாக்ஷனை பகவானைப் பூஜை செய்யவேண்டும். துளஸிவைத்திருக்கிற இடத்திலேயே எப்பொழுதும் பத்னியுடனிருக்கவேண்டும். இப்படி ஒரு வருஷகாலமிருந்தால் உங்களிருவருக்கும் யௌவனம் வரும்என்றுரைத்தார். இவ்வசனத்தைக் கேட்ட அரசனும் தன் பட்டணம் போய் நூதனமான ஒருதேசம் உண்டு பண்ணி, மண்வெட்டி களினல் கொத்தி துளஸீ விதைத்துக் கற்பூரக் கொடிகளினல் பாத்தி கட்டி., பாலினல் ஜலம் பாய்ச்சி, புஷ்பங்களினுலும் இதழ்களினுலும் அர்ச்சித்து ஆயிரம் கருந்துளஸிகளை உண்டுபண்ணினன். ஆயிரம் ஸாலக்ராமங்களைப் பூஜைசெய்தான். சங்கத்தினல் அபிஷேகஞ்செய்து

ஆயிரானமங்களினாலும் அர்ச்சித்து அர்ச்சித்த துளஸி தளங்களைப் புஜித்தான். இவ்வாறு அரசனும் அவன் பத்நினியும் அவ்விடத்திலே போய்வசித்துக் கொண்டிருந்தார்கள். இப்படி ஒருவருஷம் பூஜை செய்து ஒருநாள் அவ்விடத்தி லிருக்கும் தடாகத்தில் இருவர்களும் ஸ்நானம் பண்ணி எழுந்திருந்தவுடன் நல்ல யௌவனத்தை அடைந்தார்கள்.

பிறகு அரசன் தன் வீடுபோய்ச் சேர்ந்து பத்நினியுடன் சுகமாக இருந்து வருகிற நாளில் பாதனென்கிற பிள்ளையைப் பெற்றான். யாவனுடைய பெயரினால் பாரதவருஷமென்று இத்தேசத்தில் விவகரிக்கிறார்களோ அப்படிப்பட்டவனது ராஜ்யத்தில் அவ்வரசன் வெகுகாலம் ராஜ்ஜியபாரம் செய்து முடிவில் பத்நினியுடன் வைகுண்டபதவியை அடைந்து நிரதிசய இன்பமுற்றான்" என்றுரைத்தருளினர்.



பாத்ம புராணத்தில் துளஸி மஹாத்மியத்தில்
பாரதோபாக்கியானமான
ஒன்பதாவது அத்தியாயம்
சம்பூர்ணம்.



## பத்தாவது அத்தியாயம்.



பிரகலாதாழ்வான் பின்னுஞ் சொல்வது:—"ஒரு காலத்தில் ரிஷீஸ்வரர்களெல்லாரும் ஒன்று கூடி ஸர்வசாஸ்திரங்களும் தெரிந்த சதாநந்தரைநோக்கி ஸ்வாமி! எந்தத் தேவியின் நாமத்தைச் சொன்ன மாத்திரத்தில் பகவான் ப்ரீதி அடைந்து எல்லாப் பாபங்களையும் போக்கிப் புண்யங்கள் அனைத்தையும் கொடுத்தருளுகிறாளோ அந்தத் துளஸி தேவி உலகத்தில் எவ்வண்ணம் பூஜிக்கப்படுகிறாள். இதை அடியோங்களுக்கு விபரமாய்க் கூற வேணுமென்று கேட்டார்கள்.

அதற்குச் சதாநந்தர் ஓ ரிஷிகளே! நான் சொல்லப் புகுவதைக் கவனமாய்க் கேட்பீர்களாக. முன்னம் ருத்திரனால் தன் பிள்ளையான ஸுப்ரமண்ணியனுக்குச் சொல்லப்பட்ட துளஸியின் மஹிமையைச் சொல்கிறேன். பூர்வகாலத்தில் ஸ்ரீமன் நாராயணன் சமுத்திரத்தைக்கலசமாகவும் வாஸுகியைக் கயிறாகவும் மந்தர கிரியை மத்தாகவும் செய்து பால் ஸமுத்திரத்தைக் கடை

யும்போது அதிலிருந்து காமதேனு, கல்பக விருக்ஷம், ஐராவதம், உச்சைசரவஸ், கௌஸ்துபம், லக்ஷ்மீ, சந்திரன், அம்ருதம் உண்டாக, அச்சமயத்தில் பகவானுடைய கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பெருகி அவ்வம்ருத கலசத்தில் விழ, அக்கலசத்திலிருந்து கருப்பான துளஸி தேவி உண்டாயினள். பிறகு முன்னுண்டான கல்பக விருக்ஷம் முதலானவைகளில் துளஸீ கௌஸ்துபம் லக்ஷ்மீ இம்மூன்றையும் பகவான் தனக்கென எடுத்துக் கொண்டு கௌஸ்துபத்தையும் லக்ஷ்மியையும் மார்பில் தரித்துக் கொண்டார். கால்முதல் சிரசுவரையிலும் துளஸி தேவியைத் தரித்துக்கொண்டார். அப்போது பகவான் துளஸிதேவியைப் பார்த்து ஓ துளஸியே! உனது தர்சனத்தினலும் பரிஸனத்தினுமே எனக்கு மிகவும் ஆனந்தம் உண்டாய்விட்டது. உனக்கு என்ன வரம்வேண்டுமோ அதைக்கேள் தருகிறேன் என்றார்.

அதற்குத் துளஸிதேவி பகவானை நோக்கி எப்படிப்பட்ட மஹாபாதகங்களை எவர்கள் செய்திருந்தபோதிலும் அவர்கள் என்னைப் பூஜைசெய்தும் என் தளங்களைச் சாப்பிட்டும் உமது திருவடிகளில் அர்ச்சனை செய்த இதழ்களைப் புஜித்தும் வருவார்களாயின் அவர்களை அப்படிப்பட்ட பாபத்திலிருந்தும் விடுவித்து உமது பதத்தை அடையச்செய்வதுமன்றித் தேவரீரும் என்னிடத்தில் எப்பொழுதும் விடாத ப்ரீதி வைத்திருக்கவேண்டும். இது தான் எனக்கு வேண்டியவரம் என்று சொல்லி மௌனமாய்இருந்தாள்.

அதுகேட்ட பகவான் செங்கழுநீர், தாமரை, மாலத், ஸுகந்தம்,வெண்தாமரை,மல்லிகை,நெய்தல் இப்படிப்பட்ட புஷ்பங்களினலாவது ஸுவர்ண பஷ்பம் ரஜதபுஷ்பம்முத்தினற்செய்யப்பட்ட புஷ்பம் இவைகளில் எதனலாவது என்னைப் பூஜைசெய்தாலும் உனது இதழ் ஒன்று அத்துடன் இல்லாவிட்டால் எனக்கு அப்பூஜையில் த்ருபத்தி உண்டாகாது. புஷ்பங்களுக்குள் உன்னுடைய தளங்களினல் பூஜை செய்வதையே நான் திருப்திகரமாகயேற்று மகிழ்ச்சி அடைவேன். அத்தளம் உலர்ந்தும் மிகவும் சுத்தமாயுிருந்தால் விசேஷமாகும். பால்சமுத்திரத்திலும் வைகுண்டத்திலும் ஹரிக்ஷேத்திரத்திலும் நைமிசத்திலும் துளஸிபத்திரத்திலும் பதிவ்ரதைகளிடத்திலும் வேதாந்தத்திலும் பக்தர்

களுடைய ஹ்ருதயகமலத்திலும், ஸூர்யமண்டலத்திலும் எப்போதும் நித்தியவாஸம் பண்ணுவேன். தேவரோ, மனிதரோ, கிந்நரரோ, எவராயினுஞ் சரி; உன்னிடம் ப்ரீதியில்லாமலிருந்தால் அப்படிப்பட்டவர்கள் எனக்குச் சத்ருவாவர் என்று இந்த ப்ரகாரம் சொல்லிவிட்டுத் துளஸியை ஆலிங்கனம் செய்து பகவான் மறைந்துவிட்டார். ஆகையால் துளஸிதேவியைப் பூஜை செய்தால் முடிவில் மோக்ஷமடையக்கூடும் என்பதில் ஆக்ஷேபணையே கிடையாது என்றார்" என்றருளினர்.

பாத்ம புராணத்தில் துளஸீ மாஹாத்மியத்தில்
துளஸீ உற்பத்தி கூறும்
பத்தாவது அத்தியாயம்
சம்பூர்ணம்.



## பதினோராவது அத்தியாயம்.



பிரகலாதாழ்வான் கூற்று:—"மீண்டும் சதாநந்தர் சொல்வதாவது: ஓ ரிஷிகளே! யாவனொருவன் துளஸியை மனதினால் நினைக்கிறானோ அவனிடத்தில் பகவான் மிகவும் பிரியமாக விருப்பார். துளஸி வேரிலிருந்து மண்ணை எடுத்து எவன் நெற்றியில் வைத்துக் கொள்ளுகிறானோ அவன் அச்வமேத பலனை அடைகிறான். ஒரு தடவை துளஸியைச் சாப்பிட்டால் சாந்திராபண விரதத்திற்கு ஸமானமாகும். ஆகையினால் சரீர சுத்திக்காகவே மக்கள் துளஸியைச் சாப்பிடக்கடவர். துளஸி தளத்துடன் கூடின ஸாளக்கிராமதீர்த்தம் எவனுக்குக் கிடைக்கிறதோ அவன்தான் இக்கலியுகத்தில் புண்ணியசாலி. பகவானுடைய பூஜைக்காக எவனது கை துளஸியைக் கிள்ளுகிறதோ அவன் புண்ணியசாலியாய் ஹரிபதத்தை அடைகிறான். துளஸி காட்டினுடைய காற்றின் பரிசம் பட்டமாத்திரத்தினாலேயே ஒருவன் பரிசுத்தத்தை யடைந்து எமகிங்கரர்களாலும் பார்க்கமுடியாத சரீரமுடையவனாய் உத்தமபதத்தை அடைகிறான். துளஸி தளத்தினால் ஒரு தடவை பகவானைப் பூஜைசெய்தானேயானால் அவன் ஒரு தடவை செய்த கங்காஸ்நாந பலனை அடைகிறான். தாய்தந்தையர்களைப் பூஜிப்பவரும் துளஸி தேவியைப் பூஜிப்பவரும் உத்தமகதியை அடைகிறார்கள். உலகத்தில்

மனிதர்களுக்குத் தாய்தந்தையருடைய பூஜை கிடைப்பது மிகவும் கஷ்டம். விஷ்ணு பூஜை கிடைப்பது அதைவிட கஷ்டம். எல்லாவற்றிலும் துளஸி பூஜை கிடைப்பது மிகவும் துர்லபம். அவ்வாறே பெரியோர்களுடைய பூஜையும் பகவானுடைய கதையைக் கேட்பதிலும் அருமையாம். ஆகையால் மகா பக்தியுடன் துளஸியைக் கீழ்ச் சொல்லியிருக்கிற மந்திரத்தினால் எடுத்து ஸ்ரீமன் நாராயணனைப் பூஜை செய்தால் நற்கதியை அடைவது திண்ணம்.

"துளஸ் யம்ருதஸம்பூதே ஸதாத்வம் கேசவப்ரியே,
ஹரோத நார்த்தாய லுநாமித்வம் ப்ரஸீதயே,
மோக்ஷைக ஹேதொதரணி ப்ரஸூதே, விஷ்ணோஸ்
ஸமஸ்தஸ்ய குரோஃ ப்ரியேதே, ஆராதநார்த்தம்
புருஷோத்த மஸ்யலுநாமி பத்ரம் துளஸீக்ஷமஸ்வ."

ஓ துளஸி தேவியே! உன்னுடைய மஹிமையைத் தேவர்களும் மனிதர்களும் பாதாளலோகத்திலுள்ள நாகர்களும் ஸங்கீர்த்தனம் பண்ணுகிறார்கள். இருந்தாலும் உனது மஹிமையைச் சொல்ல பகவான் ஒருவரைத் தவிர மற்றவர்களால் முடியாது. உன்னுடைய மஹிமையைக் கோடி கல்பங்கள் சொன்னபோதிலும் அளவிடுவது மிகவும் கஷ்டம். உன்னுடைய ப்ரபாவத்தைச் சொல்லமுடியாத யான் உனது தளங்களினால் பகவானை எப்படி பூஜிக்கிறேனோ அப்படியே எனக்குப் பலனைக்கொடுத்தருள்வாய். கிருஷ்ணன் கோமதி தீர்த்தத்தில் துளஸியை வைத்துக் காப்பாற்றினது லோகங்களுடைய ஹிதத்திற்கும் கோபிகைகளின் க்ரீடைக்காகவுமே. அப்படியே ப்ருந்தாவனத்திலும் பசுக்களுடைய விருத்திக்காகவும் கம்ஸனுடைய நாசத்திற்காகவும் துளஸியைக் காப்பாற்றினார். முன் ஸ்ரீராமனும் வஸிஷ்டருடைய உத்தரவினால் ராக்ஷஸர்களுடைய நாசத்திற்காக ஸரயூநதிக்கரையில் துளஸியைக் காப்பாற்றினார். ஸ்ரீமஹாலக்ஷ்மியும் கங்கா தீரத்தில் உன்னைப் பூஜித்தாள். தேவஸ்த்ரீகளும் அவரவர்களுடைய நந்தவனத்தில் உன்னை வைத்துப் பூஜை செய்தார்கள். கயாக்ஷேத்திரத்திலும் தர்மாரண்யத்திலும் பித்ருக்களும் உன்னை வைத்துவளர்த்தார்கள். தண்டகாவனத்தில் ராமனும், லக்ஷ்மணனும், ஸீதையும் உன்னை வைத்துப் பூஜித்தார்கள். சாஸ்திரத்தில் கங்காநதியானது எப்படி பரிசுத்தம் என்று சொல்லப்படுகிறதோ அப்படியே நீயும் பரிசுத்தமா

வாய். ரிஷ்யமுக பர்வதத்தில் சுக்ரீவ மஹாராஜன் வாலியின் நாசத்திற்காக உன்னைப்பூஜை செய்தான். அப்படியே ஹனுமானும் பூஜை செய்து சமுத்திரத்தைக் கடந்து திரும்பிவந்தார். துளஸி வனத்தைப் பார்த்து எவன் முகத்தைத் திருப்பிக்கொண்டு போகிறானோ அவன் ப்ரும்மஹத்தி செய்தவனாகிறான். துளஸி தீர்த்தத்தை எவன் தன்னுடைய சிரஸில் ப்ரோக்ஷித்துக்கொள்ளுகிறானோ அவன் கங்காஸ்நாந பலனையும், நூறு பசு தானம் செய்த பலனையும் அடைகிறான். த்வாதசியில் துளஸியைக் கிள்ளுகிறவர்கள் அஸுர யோனியில் பிறக்கிறார்கள். ஒருவன் தன்னுடைய தோட்டத்தில் வைத்து வளர்த்த துளஸியை எடுத்துப் பகவானைப் பூஜை செய்வது உத்தமம். காட்டிலிருந்து எடுத்துப் பூஜை செய்வது மத்திமம். விலைக்கு வாங்கிப் பூஜைசெய்வது அதமம். ஒருவன் கையிலிருந்து வாங்கிப் பூஜை செய்வது அதமத்திலும் அதமம். தேவாலயத்திலிருந்து எடுத்துப் பூஜைசெய்தால் முன் ஜன்மத்தில் செய்த புண்யமும் போய்விடும். ஒரு பொழுதும் ஆலய ஸம்பந்தமான இடத்திலிருந்து துளஸியை எடுத்துப் பூஜை செய்யக்கூடாது. கையில் எடுத்துக்கொண்டு வந்தும் துணியில் எடுத்து வந்தும் தானாக உதிர்ந்த துளஸியை எடுத்தும் பூஜை செய்யக்கூடாது. துளஸி வனத்தில் எவன் ச்ராத்தம் பண்ணுகிறானோ அவன் கயா ச்ராத்த பலனை அடைகிறான் என்று முன்னமேயே பகவான் சொல்லியிருக்கிறார். பால்யத்திலும் யௌவனத்திலும் வார்த்திகத்திலும் என்ன பாபம் செய்தாலும் ஒரு தடவை துளஸி பூஜை செய்தால் ஸர்வமும் போய்விடுகின்றன. துளஸி பூஜையாலே பகவான் ஸந்தோஷமடைந்து ஐச்வரியத்தைக் கொடுக்கிறான். உலர்ந்த துளஸியாகிலும் அதின் கட்டையாகிலுமிருந்து பகவானைப் பூஜை செய்தால்மிகவும்சுத்தனாகிறான். துளஸியை எடுத்துக்கொண்டு ஒரு மனிதன் எங்கெங்குச் செல்லுகிறானோ அங்கங்கும் கன்று குட்டியோடு பசு செல்வது போன்று பகவான் அவன் பின் செல்கிறார். ப்ரும்மஹத்தி கோஹத்தி முதலான பாபங்களும் துளஸியை நினைத்த மாத்ரத்திலேயே ஓடிவிடுகின்றன. யுத்தத்தில் சென்று அபஜயப்பட்டவன் துளஸியை ஸ்மரித்தால் ஜயத்தை அடைகிறான். பகவத் பூஜை செய்த துளஸியை எவன் சிரஸிலாவது காதிலாவது வைத்துக் கொள்ளுகிறானோ அவனுடையும் பலனை வாயினால் சொல்லமுடி

யாது. துளஸி எவ்விடத்திலிருக்கிறதோ அவ்விடத்தில் ஹரியானவர் எப்பொழுதும் இருக்கிறார். இவ்விதமேன்மை பெற்றுள்ள இத்துளஸி மாஹாத்மியத்தை எவன் படிக்கிறானோ அல்லது கேட்கிறானோ அவன் உத்தமபதவியை அடைவான் என்பதில் ஸந்தேகமே இல்லை என்றார்'' என்று கூறியருளினர்.

பாத்ம புராணத்தில் துளஸி மாஹாத்மியத்தில்
பதினோராவது அத்தியாயம்
சம்பூர்ணம்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்.



மீண்டும் பிரகலாதாழ்வான் சொல்வது:—ஓ! பூசுதனே! ஸூதர் தம்மிடம் வந்த ரிஷிகளை நோக்கிப் பின்வருமாறு சொல்லலுற்றார். ''துளஸியின் கௌரவத்தையின்னும் கேளுங்கள்.

ஓரூரில் கிருஷ்ணனென்னும் பிராம்மணன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு நாள் காலையில் வயிறு நிறைய பழய அமுதைச் சாப்பிட்டுவிட்டு மாட்டிற்குப்புல் கொண்டு வருகிறதற்காகக் காட்டிற்குச் சென்றான். அங்குவேண்டிய புற்களை அறுத்துக்கொண்டு வரும்போது வழியில் ஒரு துளஸி வனத்தைக்கண்டான். அத்துளஸிவனமானது மிகவும் செழித்தும் கருப்பாயுமிருந்தது. அதைப்பார்த்து இத்துளஸியும் மாட்டிற்கு ஆகாரமாகுமேயானல் தினந்தோறும் ஒருவித கஷ்டமும் இல்லாமல் நமது மாட்டிற்கு வேண்டுமளவு அறுத்துக்கொண்டுபோய் போடலாமே என்று ஆலோசித்தான். ஆனாலும் இப்பொழுது இத்துளஸியைக் கொஞ்சம் கொண்டுபோய் நம்முடைய பக்கத்து வீட்டுக்காரரிடம் கொடுத்தால் அவர் அதை என்ன செய்கிறார் என்று பார்த்துவிட்டு நாமும் அவ்விதமே செய்யலாமென்று எண்ணிக்கொண்டு நிற்கையில் தெய்வகதியாக யமபடர்கள் அவ்விடம் வந்து ஒரு ஸர்ப்பத்தைப்பார்த்து ஓ கிருஷ்ண ஸர்ப்பமே! இந்த அற்ப ஆயுளையுடைய பிராமணன் துளஸியைக் கையினல் தொடுவதற்கு முன் நீ இவனைக்கடித்துக்கொன்று விடு. நாங்கள் எங்களிருப்பிடத்திற்கு இவ்வந்தணனைக் கொண்டுபோய்விடுகிறோம் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது இவ்வந்தணன் ஒருபிடி துளஸியைக் கை

யில் பரித்துக்கொண்டான். உடனே தெய்வானுகூலத்தால் இந்த மூடனைக் காப்பாற்றுவதற்குப் பகவானுடைய சக்ராயுதம் வந்து சேர்ந்தது. பிராமணன் புல்லுக்கட்டைப் பிடி துளஸியுடன் எடுத்துக்கொண்டு வீட்டிற்குப் புறப்பட்டான். கிருஷ்ண ஸர்ப்பமும் அவனைக்கடிக்க முடியாமல் அவனது புல்லுக்கட்டில் அவனுக்குத் தெரியாமல் நுழைந்துகொண்டது. யமகிங்கிலியர்களும் அவனைப் பின் தொடர்ந்தேபோனார்கள். பிராம்மணன் தனது வீட்டைக் கிட்டினதும், அடுத்த வீட்டுப்பிராம்மணன் எப்பொழுதும் கிருஷ்ண பூஜை செய்கிறவனுகையால் அந்தக் கிருஷ்ண பூஜையின் மஹிமையால் கிருஷ்ணனென்னும் விப்பிரனுடன் சக்ராயுதம் வருவதையும் யமகிங்கார்கள் வருவதையும் பார்த்தான். பார்த்ததும் இதென்ன வாச்சரியம் என்று தனக்குள் ஆலோசித்து யமகிங்கரர்களை நோக்கி ஓ யமபடர்களே! இவ்வந்தணனைச்சுற்றிச் சக்ராயுதமும் நீங்களும் தொடர்ந்து வருகிறீர்களே? என்ன காரணமென்று வினவ,யமகிங்கார்கள் இவனுக்குஆயுள்முடிந்துவிட்டது. இவன் கையிலிருக்கிற துளஸியைக்கீழே போட்டதும்இவன் தலையிலுள்ள புல்லின் கட்டிலிருக்கிற பாம்பானது இவனைக்கடிக்கப் போகிறது.அதுகடித்த உடனேஇவ்வந்தணன்மரிக்கப்போகிறான். நாங்கள் எங்களுடைய லோகத்திற்கு இவனைக்கொண்டுபோக வந்திருக்கிறோம் என்று சொன்னார்கள். இவ்வாலாற்றைக்கேட்ட அந்தணன் புல்லுக்கட்டுவைத்திருக்கிற பிராம்மணனிடத்தில் தயையுண்டாகிமறுபடியும் எமகிங்கார்களைக் கேட்கலுற்றான். ஓ தூதர்களே! இவ்வந்தணன் துளஸியைக் கீழே போட்டதும் சக்ராயுதம் போய்விடும். அப்போது புல்லுக்கட்டிலிருக்கிற ஸர்ப்பம் இவனைக்கடித்துவிடுமே;என்ன செய்கிறது;இவன் பிழைக்கும்படியான மார்க்கத்தை நீங்கள் சொல்லுங்கோள் என்று கேட்டான்.

தூதர்கள் அதற்கு இது முதல் அரையாமத்திற்குள்ளாக அதாவது மூன்றேமுக்கால் நாழிகைக்குள்ளாகக் கையிலிருக்கிற துளஸியைக் கீழேபோடாமல் வைத்துக்கொண்டிருந்தால் இவனுக்குப் பூர்ணாயுசு உண்டாகும். இச்சர்ப்பம் உடனே மறித்துவிடும். எவன் ஒருவன் துளஸியின் ஓரிதழைக்கொண்டாவது பகவானைப் பூஜிக்கின்றானே அதின்மஹிமையால் சக்கிராயுதமானது எங்களை அவன் சமீபத்தில் வரவொட்டாது. நீ பகவத்பக்தனுகையால் நாங்கள் உனக்குக் காணப்பட்டோம். இனி எங்களிடத்திற்

குப் போகிறோம். உனக்கு இவ்வந்தணனை ரக்ஷிக்கிறதில் என்ன மிருப்பதால் நீ தினம்செய்கிற துளஸிபூஜையில் ஒருநாளைய பூஜையின் பலனைக் கொடுத்தால் இவனுக்குப் பூர்ணாயுசு உண்டாகும் என்று சொல்லிவிட்டுத் தூதர்கள் தங்களிருப்பிடம் போய்ச்சேர்ந்தார்கள். இதுகேட்ட பிராம்மணனும் தன்னுடைய துளஸி பூஜா பலனை அவ்வந்தணனுக்குக் கொடுத்து அவனைக் காப்பாற்றினான். இவ்வாறு காப்பாற்றப்பட்ட அந்தணனும் துளஸி பூஜை செய்து முடிவில் நற்கதியை அடைந்தான். துளஸி எந்த வீட்டில் இருக்கிறதோ அவ்விடத்திற்கு யமகிங்கரர்கள் வரமாட்டார்கள். துளஸிதளத்தைத் தொட்டமாத்திரத்தினால் கங்காஸ்நாந பலன் உண்டாகிறது. துளஸியைப் பயிர் செய்கிறவனுக்கும் அதைக் காப்பாற்றுகிறவனுக்கும் கண்ணால் பார்க்கிறவனுக்கும் கையினால் தொடுகிறவனுக்கும் சரீரத்தில் இருக்கப்பட்ட ஸகல பாபங்களும் போய்விடுகின்றன. ஒவ்வொரு த்வாதசியிலும் ப்ரும்மாதி தேவர்கள் துளஸியைப்பூஜை செய்கிறார்கள். ஸ்வர்ணதானம் முதலான தானம் செய்வதால் எந்தப் பலன்வருகிறதோ, அந்தப்பலனைவிட, துளஸியின் ஒரு இதழைத்தானம் செய்வதால் வரும் பலனது அளவைவாயினாற் சொல்லமுடியாது. ஆயிரம் மாமரங்கள் வைத்துப் பயிராக்குவதினும் ஒரு துளஸி வைத்துப்பயிராக்குவது மேன்மையாகும். துளஸி தளங்களினால் பகவானைப் பூஜை செய்கிறவனுக்கு மறு ஜன்மம் கிடையாது. புண்ணிய தீர்த்தங்களும், புண்ணிய நதிகளும், துளஸி இருக்கிறவிடத்தில் நித்தியவாசம் செய்கின்றன. ஒருவன் தன்னுடைய வீட்டில் துளஸிவைத்து வளர்த்து ஒரு தடவையாவது இரண்டு மூன்று தடவையாவது பூஜை செய்தால் அவன் ஸ்வர்க்கலோகத்தில் நல்ல போகங்களை அனுபவிக்கிறான் என்றார்" என்று அருளிச்செய்தார்.

பாத்ம புராணத்தில் துளஸி மாஹாத்மியத்தில்
பிராம்மணனுடைய மரண விமோசனமான
பன்னிரண்டாவது அத்தியாயம்
சம்பூர்ணம்.



# பதின்மூன்றாவது அத்தியாயம்.



பிரகலாதாழ்வான் கூறுவது:—"நாரதர் ருத்திர மூர்த்தியை வணங்கி எவ்விதமாகத் துளஸியை வைத்துப் பூஜை செய்கிறது; அதின்விபரத்தை எனக்குத் தெரிவிக்கவேணும் என்று கேட்ட போது ருத்திரமூர்த்தி கீழ்வருமாறு சொல்லலுற்றார்.

ஒருவன் தன்னுடைய வீட்டின் முற்றத்தில் மண்டபமியற்றி நல்லசுபதினத்தில் துளஸியை வைத்துப் பகவானுக்காகவும் தன்னுடையசுபத்திற்காகவும் பூஜை செய்யவேண்டியது. அதின் வேரில் பாத்திகட்டவேண்டியது. தினம்தோறும் காலையில் ஸ்நானம் செய்துஸந்தியா காரியங்களை முடித்து நூற்றெட்டுதரம்காயத்ரியை ஜபம்செய்து உபஸ்தானம்செய்துவிட்டுக் கிழக்கு அல்லது, வடக்கு முகமாகவிருந்துகொண்டுநான்கு கைகளிலும் தாமரைப்பூவைத் தரித்துக்கொண்டு, கிரீடம், முக்தாஹாரம், குண்டலங்களிவற்றாலலங்கரிக்கப்பட்டவளாயும்வெளுத்த வஸ்திரத்தைக்கட்டிக்கொண்டிருக்கிறவளாயுமுள்ள ஓ துளஸி தேவியே! உன்னை த்யானம் பண்ணுகிறேன் என்றும், பின்னர், மூன்றுலோகத்திற்கும் மாதாவாக இருக்கப்பட்டவளே! மூன்று லோகங்களையும் பரிசுத்தம் பண்ணுகிறவளே! ஓ தேவியே! நான் வைத்திருக்கிற இத்துளஸியில் எப்பொழுதும் வாஸம் செய்யவேண்டும் என்றும் பிரார்த்திக்கவேண்டும்.

அதன்பின் பகவானுக்கு எப்பொழுதும் இஷ்டமாயிருப்பவளே! ஸமஸ்ததேவர்களுக்கும் அதிகாரியாயுமிருக்கப்பட்ட துளஸி தேவியே! உனக்கு ஆஸனம் ஸமர்ப்பிக்கிறேன் என்று ஆஸனம் போடவேண்டியது.

பிறகு ஸர்வ தேவர்களாலும் பூஜிக்கப்பட்ட ஓ தேவி! உனக்கு பாத்தியம் ஸமர்ப்பிக்கிறேன் என்று திருவடிக்குத் தீர்த்தம் கொடுக்கவேண்டியது.

அதன்மேல், ஸர்வபுண்ணிய தீர்த்தங்களுக்கும் வாஸஸ்தானமாயிருக்கிற தேவியே! உனக்கு அர்க்கியம் தருகிறேன் என்று அந்தத் தீர்த்தத்தினால் தீர்த்தம் கொடுக்கவேண்டியது.

அதன்பின் ஸர்வலோகங்களையும் ரக்ஷிப்பதற்கு அவதரித்த தேவியே! ஆசமனம் கொடுக்கிறேன் என்று ஆசமனம் கொடுக்கவேண்டியது.

அப்புறம் அனேக புண்ணிய நதிகளிலிருந்தும்கொண்டுவரப்பட்ட தீர்த்தத்தினல் ஸ்நாநம் செய்துவைக்கிறேன் அதை ப்ரீதியினல் பெற்றுக்கொள்ளவேண்டும் என்று அனேக வாஸனைகள் சேர்த்த தீர்த்தத்தினல் ஸ்நாநம் செய்து வைக்கவேண்டியது.

அனந்தரம் சமுத்திரம் கடையும்போது உண்டானவளே! சந்திரனுக்கும் லக்ஷ்மிக்கும் ஸஹோதரியே! உடுத்திக்கொள்ளுவதற்காக இவ்வெண்பட்டைக் கொடுக்கிறேன் என்று வஸ்திரம் சமர்ப்பிக்கவேண்டியது.

பிறகு குங்குமப்பூ முதலான அனேக வாஸனைத்ரவ்யங்கள் சேர்த்த சந்தனத்தை உனக்கு ஸமர்ப்பிக்கிறேன் என்று சந்தனம் சாத்தவேண்டியது.

அதன்மேல் தாமரைப்பூ நெய்தல் குருக்கத்தி முதலான புஷ்பங்கள் ஸமர்ப்பிக்கிறேன் ப்ரீதியுடன் பெற்றுக்கொள்ளவேணும் என்று புஷ்பத்தால் அர்ச்சிக்கவேண்டியது.

அனந்தரம் ஸாம்பிராணி, அகில் முதலிய வாசனைத்திரவியங்களினல் பரிமளதூபம் போடுகிறேன் கிருபையோடு பெற்றுக்கொள்ளவேணும் என்று தூபம்போட வேண்டியது.

பின்னர் அஞ்ஞானமாகிற இருளால் சூழப்பட்டவர்களுக்கு ஞானமாகிற தீபத்தைக்கொடுக்கிற தேவியே! உனக்குத் தீபம்சமர்ப்பிக்கிறேன் என்று நெய்யினல் தீபம் சமர்ப்பிக்க வேண்டியது.

பிறகு உலகமாதாவே! என்னுடைய சக்திக்குத்தக்கபடி நைவேத்திபம் சமர்ப்பிக்கிறேன் அதை மிகவும் ப்ரீதியுடன் பெற்றுக்கொள்ளவேணும் என்று மகா நைவேத்தியம் சமர்ப்பிக்க வேண்டியது.

அனந்தரம் சுத்த தீர்த்தம் சமர்ப்பிக்கவேண்டியது.

பிறகு, அம்ருதத்திலிருந்து பிறந்தவளே! கர்ப்பூர சூரணம் சேர்ந்த தாம்பூலம்தருகிறேன்என்று தாம்பூலம்கொடுக்கவேண்டியது. முடிவில்பக்தர்களுக்கு இஷ்டத்தைக் கொடுக்கப்பட்டவளே! உன்னைப் பக்தியாக ப்ரதக்ஷிணம் பண்ணுகிறேன் என்று ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து என்னிடத்தில் எப்பொழுதும் தயை பாராட்டி என்னுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்ளவேண்டியது. இவ்விதம் தினம் தோறும் பரிசுத்தனக இருந்துகொண்டு காலையிலாவது மத்தியா

னத்திலாவது சாயங்காலமாவது பூஜைசெய்யவேண்டியது. குறைந்தது நான்குமாதமாவது இப்படி பக்ஷ்ப பாயஸங்களினல் தினம் பூஜை செய்துவர வேண்டியது.

ஏகாதசி யன்றையதினம் கொஞ்சநாழிகை ஏகாதசி யிருந்தாலும் உபவாஸமிருந்து அன்று ராத்ரி விசேஷமாய் துளஸி பூஜை செய்யவேண்டியது. இப்படிப்பட்ட துளஸி பூஜையின் மஹிமையை எவன் ஒருதரம் படிக்கிருனே ஒருதரம் கேட்கிருனே அவன் முடிவில் நல்ல பதத்தை அடைகிருன்'' என்ருர் என்றருளிச் செய்தார்.

பாத்ம புராணத்தில் துளஸி மஹாத்மியத்தில்
துளஸி தேவியைப் பூஜைசெய்கிற விதத்தைப்பற்றிய
பதின்மூன்ருவது அத்தியாயம்
சம்பூர்ணம்.



## பதினன்காவது அத்தியாயம்.



பிரகலாதாழ்வான் மீண்டும் சோல்வது:—''மங்கள ரூபமான மந்திரத்திற்கு ரிஷியானவர் பிரும்மா, அனுஷ்டுப் த்ரிஷ்டுப் சந்தஸ், துளஸிதேவி தேவதை; ஆகைபால் மங்கள ரூபியாயும் மனதிற்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவளாயும், விஷ்ணுவிற்கு அடியாளாயும் விஷ்ணுவினுடைய மார்பில் வாஸம் செய்பவளாயும் விஷ்ணு பக்தர்களால் பூஜிக்கப்படுகிறவளாயும் பால் சமுத்திரத்தில் வாஸம் செய்கிறவளாயும் பால்நுரைபோல் மனதிற்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பவளாயும், ச்ரத்தை என்னும் பெயருடையவளாயும், மஹேச்வரியாயும் மாயாரூபியாயும் எல்லாம் தெரிந்தவளாயும் வஸுந்தரை என்னும் திருநாமமுடையவளாயும் நிறைந்த ஸம்பத்தைக் கொடுக்கிறவளாயும் மிகவும் பரிசுத்தையாயுமிருக்கிற ஓ துளஸி தேவியே! உன்னை நமஸ்கரிக்கிறேன்; எனக்குக் கீர்த்தியையும் பராக்கிரமத்தையும் வித்தையையும் ஐச்வர்யத்தையும் கொடுத்தருள்வாயாக. மங்களகாரியங்களுக்கு மங்களமாயும் பரிசுத்தமான வஸ்துக்களுக்கெல்லாம் பரிசுத்தகரமாயும் பஞ்சபூதங்களுக்குள் உத்தமபூதமாயும் தேவர்களுக்கெல்லாம் அதிதேவதையாயும், லக்ஷ்மீதேவிக்கு மிகப்ரீதி

யுடையவளாயும், ஸ்ரீ மஹா லக்ஷ்மிக்குத்தோழியாயும் பூதேவிக்கும் அத்தியந்த இஷ்டையாயும், ஸரஸ்வதி, மஹாதேவி, பார்வதி, ஸ்ரீதே, ஸநாதனி, பூதே, பூமி, அசலா, அனந்தா, பத்மாக்ஷீ, லோக ஸுந்தரி, ருக்மணி, ஸீதா, ராதா, விச்வம்பரா, ஸ்திரா, மஹாலயா, மஹாபாகா, பாகினீ, பிரியாளு, வகுளாமோதி இத்யாதி பெயருடையவளாகிய நீ எனக்கு மங்களத்தைக் கொடுத்தருள்வாயாக. பகவானுடைய மார்பில் வாஸம் செய்கிற ஸ்ரீ மஹாலக்ஷ்மியினுல்எப்பொழுதும் மதிக்கப்பட்டவளாயும் வாடிப்போகிறவர்களை வாடாமலிருக்கச்செய்கிறவளாயும் பக்தர்களிடத்தில்ப்ரீதியுடையவளாயும் விளங்கும் ஓ தேவியே! எனக்குப் புத்திரபௌத்திராதிகளையும்சத்ருக்களின் ஜயத்தையும் கடாக்ஷிப்பாயாக. கெட்டகனவுகளைப்போக்கடித்து வித்தையையும் அரோகத்தையும் பசுக்களையும் பூமியையும் வேலைக்காரர்களையும் கீர்த்தியையும் மனச்சுத்தியையும் யாகஸித்தியையும் தனதான்யங்களையும் கொடுத்தருளவேணும். உன்னை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் நீ என்னிடத்தில் கிருபை வைக்கவேணும்; புத்திரமித்திர களத்திராதிகளையும் ரத்தினங்களையும் வீடு பூமி முதலானவைகளையும் எனக்குக்கொடுத்தருளவேணும். விஷ்ணு பக்தியையும் ஸம்பத்தையும் வித்யையும் தனதானியத்தையும் நிறைந்த அன்னத்தையும் கொடுத்தருள்வாயாக. மிகவும் அழகுள்ளவர்களாயும் பராக்கிரமசாலிகளாயும் ரோகமில்லாதவர்களாயும், வெகுகாலம் ஜீவித்திருப்பவர்களாயும் படிப்புள்ளவர்களாயும் கீர்த்தியுடையவர்களாயும் விளங்கத்தக்க மக்களாயும் மித்திரகளத்திரர்களுடன் கூடினவர்களாயும் மிகவும் பாக்கியசாலிகளாகவும், ஸோமயாகம் செய்கிறவர்வாழ்வை உள்ளவரானபுத்திரர், மருமக்கள் முதலானவர்கள் என்னைப்போன்றுவாழவும், எனக்கு எப்பொழுதும் பணிவிடை செய்யவும் நற்குணங்களுடையவர்களாய்இருக்கவும் செய்து என்னுடைய பந்துக்கள் எப்பொழுதும் ஆனந்தமுடையவர்களாய் இருக்கவும் என்னுடைய வீட்டில் எப்பொழுதும்வேதகோஷ்டம் நிறைந்திருக்கவும் என் வீடு மிகப்பரிசுத்தமாயிருக்கவும்பெரியோர்கள் எப்பொழுதும் என்னிடத்தில் ப்ரீதியுடையவர்களாய்இருக்கவும் செய்யவேணுமென்று உன்னைப்பிரார்த்திக்கிறேன். ஸகலதேவதைகளும் என்னிடத்தில் ப்ரீதிவைக்கவேண்டும். நீயே லக்ஷ்மீ, மஹாதேவி. எப்பொழுதும் பகவானுடைய மார்பில் வாஸம்செய்

கிறவள் என்று நமஸ்காரம் செய்கிறேன். உன்னுடைய நாமங்களைக்கீர்த்தனம் செய்கிறவர்களுடையவும், உன்னைப் பூஜைசெய்கிறவர்களுடையவும் உன்னுடையதளங்களினால் பகவானுடைய திருவடியைப் பூஜை செய்கிறவர்களுடையவும், பாததூளியை யான் சிரஸில் தரிக்கிறேன் என்று வணங்கிவரவேண்டும் என்று ருத்ர மூர்த்தி யருளிச்செய்துள்ளார்" என்றார்.

இப்படி ஸுப்ரமண்ணியர் முதலான தேவர்களினால் முற்காலத்தில் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட விந்த விஷயத்தை எவர்கள் பாராயணம் செய்கிறார்களோ அவர்களுக்கு ஆயுளையும் கீர்த்தியையும் புத்திரமித்திராதிகளையும் ஐச்வரியத்தையும் புத்தியையும்வித்தையையும் நற்குணங்களையும் துளஸிதேவி கொடுத்தருள்வாள். இந்த ஸ்தோத்திரத்தை ஸாயங்காலத்தில் ஜபிக்கவேண்டியது. விசேஷமாய் துளஸி வனத்தில் ஜபிக்கலாம். நதிகளிலும் ஜபம் செய்யலாம். பிராம்மண ஸ்த்ரீ பன்னிரண்டு வயதிற்குமேல் இருபது வயதிற்குள்ளாக இந்த ஸ்தோத்திரத்தை ஜபம் செய்தால் புத்திர பாக்கியங்கள் உண்டாகும். உபவாஸ நாட்களில்ஜபித்தால் அனந்த விரதத்தின் பலன்கைகூடும். எவனெவன் எந்தெந்த இஷ்டத்தைக் குறித்து ஜபிக்கிறானோ அவனவன் அந்தந்த இஷ்டத்தை அடைகிறான். எவனொருவன் ஔஷதங்கள் சாப்பிடும்போது ஜபிக்கிறானோ, அவனுக்கு எப்பொழுதும் ரோகமே வாராது. ஸமஸ்த மங்களத்தைக் கொடுக்கிறதாயும் பாபத்தைப் போக்கடிக்கிறதாயும், ஸகல ஸௌபாக்கியங்களைக் கொடுக்கிறதாயும் இருக்கிற இந்த ஸ்தோத்திரத்தை விசுவாஸத்தினால் சொன்னேன். இதைத் தினமும் ஜபிக்கவேண்டியது. இந்த ஸ்தோத்திரம் எந்தவீட்டில் எழுதிவைக்கப்பட்டிருக்கிறதோ அந்த வீட்டில் பேய் முதலிய துஷ்ட ஜந்துக்கள்வாரா. அதிகமாய் சொல்வதில் பிரஜோனமில்லை. எவனொருவன் இதை ஜபிக்கிறானோ படிக்கிறானோ, படிக்கும்படி செய்கிறானோ எழுதுகிறானோ எழுதும்படி செய்கிறானோ அவன் பகவானிடத்தில் எப்பொழுதும் பக்தியுடையவனாகவே இருப்பன் என்பதில் ஸந்தேகம் கிடையாது என்று ஸூதமாமுனிவர் சொல்லியருளினர்.

பாத்ம புராணத்தில் துளஸி மஹாத்மியத்தில்
மங்களாத்மக ஸ்தோத்திரமாகிற
பதினான்காவது அத்தியாயம்
சம்பூர்ணம்.

## பதினைந்தாவது அத்தியாயம்.



சூதமுனிவர் கூற்று:— “மீண்டும் ரிஷிகள் சூதமுனிவரை நோக்கி ஸ்வாமி! நாங்கள் தேவரீரிடத்திலிருந்து ஸகலமும் கேட்டு ஆனந்தத்தை அடைந்தோம். மறுபடியும் துளஸி தேவியின் கவசத்தை எங்களுக்கு விசேஷமாய்ச் சொல்லவேண்டும் என்று ரிஷிகள் கேட்டார்கள்.

அவற்கவர் ஓ ரிஷிகளே! முன் கிருதாயுகத்தில் ஸுப்பிரமண்ணியரானவர் தாரகாசுரனுடைய யுத்தத்தைக்குறித்துத் தன்னுடைய பிதாவினிடத்தில் சொல்லிக்கொண்டார். எப்படி என்றால்

ஓ பிதாவே! எவ்விதமாக யான் சிரேயஸை அடைவேன். என்னைத் தேவர்கள் ஸேனுபதியாக நியமித்திருக்கிறார்கள். மிகவும் பராக்கிரமசாலியான தாரகாசுரன் எப்பொழுதும் தேவர்களையும் என்னையும் தொந்தரவு செய்கிறான். அதினுல் யான் இரவு பகல் தூங்கவேயில்லை. யுத்தத்தில் என்னை அபஜயப்படுத்துகிறான். அவனை ஜயிக்கக்கூடிய வழி ஏற்படவில்லை. அவனைக் கொல்லக்கூடிய பாணங்களும் என்னிடத்தில் கிடையா. யுத்தப் பயிற்சியிலும், வில்வித்யையிலும், தேர்ப்பயிற்சியிலும், மல்யுத்தத்திலும் சமர்த்தனுய் அனேக திவ்வியாஸ்த்ரங்களையும் தெரிந்தவனுகவுமிருக்கிறான். அவ்வஸுரனை நான் எவ்விதங் கொல்வேன். உமக்குப் புத்திரனுயும், சிஷ்யனுயும் இருக்கிற யான் உம்மைச் சரணமடைந்தேன். எவ்வித உபாயத்தினுல் எந்த அஸ்திரத்தினுல் அவனை வெல்வேன். இவ்விஷயத்தை எனக்குத் தெரியச்சொல்ல வேணுமென்று கேட்டுக்கொண்டான்.

அதற்குப் பார்வதிரமணன் ஓ புத்திரனே! தபஸிலும் பராக்கிரமத்திலும் அஸ்திரப் பயிற்சியிலும் மற்ற எந்த விதத்திலும் தாரகாஸுரனுக்கு ஒத்தவன் பூலோகத்தில் கிடையாது. அப்படிப்பட்டவனை வெல்வதற்கு ஒருவராலும் முடியாது. ஆகிலும் உனது ஹிதத்திற்காக ஒருபாயம் உனக்குமாத்திரம் சொல்கிறேன். மற்றொருவருக்கும் இந்த ரகஸ்யத்தைச் சொல்லக்கூடாது. அதாவது துளஸிதேவியின் கவசத்தைச் சூரியோதயகாலத்தில் மூன்றுதடவை ஜபிக்கவேண்டியது. அப்படி ஜபித்தால் உடனே சத்ருவை ஜயிப்பாய். புண்ணிய தீர்த்தங்களிலும் வேதங்களிலும்

தேவர்களிடத்திலும் எவ்வளவு புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியத்தை அடைவாய். எவனொருவன் இக்கவசத்தை ஜபிக்கிறானோ அவன் சத்ரு ஜயத்தையும் மித்திர லாபத்தையும் புத்திர ஸம்பத்தையும் ராஜ்ய லக்ஷ்மியையும் அடைகிறான். மற்றும் மூன்று லோகங்களிலும் பரவும்படியான கீர்த்தியையும் ஸர்வ ஸம்பத்தையும் நல்ல வித்யையும் தேவ ஸ்வரூபத்தையும் யக்ஷ வித்யாதரரூபத்தையும் தீர்க்காயுஸ்ஸையும், புத்திர பௌத்திராதிபர்களையும், வணக்கத்தையும் பொறுமையையும் பகவானிடத்தில் பக்தியையும் அடைகிறான். மறுபடியும் ஜ்வரம் குஷ்டரோகம் கபம் முதலான வியாதிகளையும் ஜயித்துவிடுகிறான். யமனிடத்தில் பயமுள்ளவர்களும், ஆயுள் விருத்தி அடையவேணுமென்கிறவர்களும் பதிகள் தங்களுக்கு உள்படவேணுமென்று நினைக்கிறவர்களும் ஸ்திரீகள் தங்களுக்கு வச்யமாகவேணுமென்கிற புருஷர்களும் அரசன் தங்களுக்குள்ளாக வேணுமென்கிற எண்ணமுடையவர்களும் இக்கவசத்தை ஜபம் செய்யவேண்டியது. யுத்தத்தில் சத்துரு எதிரில் வரும்போது இக்கவசத்தை ஜபித்தால் உடனே சத்ரு அபஜயத்தை அடைவான். வித்வான்களோடு வாதம் செய்யும்போதும் அரசனுடைய சபையில் விவாதம் நேரிடும்போதும் இக்கவசத்தைச் சரீரத்தில் வைத்துக்கொண்டால் ஜயத்தை அடையலாம். கருப்பு காலங்களிலும் பயமுண்டான காலத்திலும் நதிகளைத் தாண்டுகிறபோதும் அரசனுடைய கோபகாலத்திலும் இக்கவசத்தை ஜபிக்கிறவன் க்ஷேமத்தை அடைகிறான். துளஸீ கவசத்திற்கு நானே ரிஷி, அனுஷ்டுப் சந்தஸ், துளஸீ தேவதை. எவனெவன் எந்தெந்தக்காரியத்தை உத்தேசிக்கிறானோ அந்தந்தக் காரியத்தில் வினியோகப்படுத்த வேண்டியது இக்கவசமொன்றே. துளஸிதேவி என்னுடைய சிரஸ்ஸைக் காப்பாற்றவேணும் ; பங்கஜதாரிணியானவள் நெற்றியை ரக்ஷிக்கட்டும். பத்மநயனையானவள் கண்களை ரக்ஷிக்கட்டும். ஸ்ரீஸகையானவள் காதைக்காப்பாற்றவேணும். ஸுகந்தினீயானவள் மூக்கை ரக்ஷிக்கட்டும். ஸுமுகியானவள் முகத்தைக் காப்பாற்றவேணும். சுபதையானவள் நாக்கை ரக்ஷிக்கவேணும். வித்யாமயியானவள் கழுத்தை ரக்ஷிக்கட்டும். கல்யாணியானவள் தோள்களை ரக்ஷிக்கவேணும். பாபஹாரிணியானவள் புஜத்தை ரக்ஷிக்கட்டும். விஷ்ணுவல்லபையானவள் ஹ்ருதயத்தைக் காப்

பாற்றவேணும். புண்ணியதையானவள் இடுப்பைரக்ஷிக்கவேணும். ஸௌபாக்கியத்தைக்கொடுக்கிற தேவி நாபியை ரக்ஷிக்கவேணும். இடுப்பைக்குண்டலினீயானவள் காப்பாற்றவேணும். நாரதரால் தொழப்பட்ட தேவியானவள் தொடையை ரக்ஷிக்கட்டும். முழங்கால்களை ஜனனியானவள் ரக்ஷிக்கவேணும். நாராயணீயானவள் கால்களை ரக்ஷிக்கட்டும். ஸர்வரக்ஷகியானவள் ஸர்வாங்கத்தையும் ரக்ஷிக்கவேணும். கஷ்டகாலங்களிலும் பயத்திலும் யுத்தத்திலும் இராப்பகலிலும் ஸந்தியா காலங்களிலும் எப்பொழுதும் துளஸி தேவியானவள் என்னை ரக்ஷிக்கவேணும். இப்படிப்பட்ட இந்தத் துளஸி கவசமானது மனிதர்களுடைய பயத்தைப் போக்கடிப்பதற்காகவும் மோக்ஷத்திற்காகவும் ஸம்பத்தை இச்சிக்கிறவர்களுக்கு ஸம்பத்தைக்கொடுபதற்கும், யுத்தம் செய்கிறவர்களுக்கு ஜயத்தைக் கொடுப்பதற்கும் வியாதியஸ்தர்களுக்கு வியாதியைப்போக்குவதற்கும், வசியம் செய்கிறவர்களுக்கு உபகாரம் செய்வதற்கும் தரித்திரர்களுக்கு ஸம்பத்தைத்தருவதற்காகவும் பாபிகளுடைய பாபம் போகிறதற்காகவும் பசியுடையவர்களது பசியை அடக்குவதற்கும் ஸ்வர்க்கத்தில் ஆசையுடையவர்களுக்கு ஸ்வர்க்க பலனைக்கொடுப்பதற்கும், புத்திரஆசையுடையவர்களுக்குப் புத்திர ஸம்பத்தைக்கொடுப்பதற்கும் ராஜ்ய ஆசையுடையவனுக்கு ராஜ்யத்தைத்தருவதற்கும் இதை அவசியம் ஜபிக்கவேண்டியது. ஸூரியனுக்கெதிரில் கைகூப்பி இக்கவசத்தை ஜபிக்கவேணும். துளஸிவனத்தில் ஜபிக்கிறவன் இஷ்டமான பலனை அடைகிறான். புத்திரனை இழந்த ஸ்திரீ இக்கவசத்தை ஜபித்தால் உடனே நல்ல புத்திரனைப்பெறுவள். மலடியின் சரீரத்தை இம்மந்திரத்தைக் கொண்டு தர்ப்பையினால் துடைத்தால் அவள் ஒரு வருஷத்திற்குள் புத்திரனைப்பெறுவள். ஜ்வரமுடையவனையும் குஷ்டரோகமுடையவனையும் இக்கவசத்தை ஜபித்துத்தர்ப்பையால் பரிசித்தால் ஒரு மண்டலத்திற்குள் அவர்கள் சௌக்கியம் அடைகிறார்கள். பர்த்தாவினிடத்தில் விரோதித்துக்கொண்டிருக்கிற ஸ்திரீயின் சரீரத்தைக் கவசத்தினால் துடைத்தால் அவ்விரோதம் நீங்கி முன்போல் பர்த்தாவை அடைகிறாள். எந்த மனிதன் எந்த ஸ்திரீயை இச்சிக்கிறானோ அந்த ஸ்திரீயின் சரீரத்தை இக்கவசத்தினால் தொட்டால் உடனே அந்த ஸ்திரீயை அடைகிறான். குரூபியான கன்னிகையை இம்மந்திரத்தைச் சொல்லித் தர்ப்பையினால் சரீரத்

தைத் துடைத்தால் அவளுக்கு நல்லரூபம்உண்டாகிநல்லநாயகனை அடைவாள். அரசன் வசியமாகவேணுமென்கிறவன்அரசமரத்தடியிலும், குரூபியானவன் ஜலத்திலும், வித்யார்த்தியானவன் பலாசமரத்தினடியிலும், கன்னிகை வேணுமென்கிறவன்சண்டியின்கோயிலிலும், சத்ருநாசத்தைக் கோருபவன் என்னுடைய ஆலயத்திலும், ஐச்வரியம் வேண்டியவன் விஷ்ணு கோவிலிலும், ஸ்திரீயின் வசியத்தைக்கோருகிறவன்உத்தியானவனத்திலும், இக்கவசத்தை ஜபம் செய்யவேண்டியது. அதிகமாய்ச் சொல்வதில் என்ன பிரயோஜனம். சுருக்கமாய்ச் சொல்கிறேன்கேள். எந்தெந்தப்பலனைக் குறித்து எவனெவன் த்யானம் செய்கிருனே அந்தந்தப் பலனை அவனவன் அடைகிறான். ஆகையினல் என்னுடைய ஆலயத்தில் இருக்கிற நீ தாரகாசுர வதத்திற்காகத் துளஸியினிடத்தில் மனதைச் செலுத்தி இக்கவசத்தை ஜபம் செய்பக்கடவாய். இப்படி த்யானம் செய்தால் ஒரு மண்டலத்திற்குள்ளாகத் தாரகாசுரனை ஜெயிப்பாய். இன்னமும் சொல்கிறேன்: துளஸியின் மூலமந்திரத்தைக்கேள். "துளஸி, ஸ்ரீஸகே, தேவி, பாபஹாரிணி, புண்யதே, நாரதவினுதே" என்னும் நாமங்களையும் ஜபித்தால் நிச்சயமாய்த் தாரகனை யுத்தத்தில் ஜயிப்பாய். சீக்கிரமாக ஸித்தியைக் கொடுக்கக்கூடிய மந்திரம் இதைவிட வேறுகிடையாது. மோக்ஷத்தில் ஆசைவைத்து ஜபித்தால் மோக்ஷத்தை அடையலாம். கவசம் மூலமந்திரம், மங்களாத் மகஸ்தம் என்னும் இம்மூன்றையும் ஜபித்தால் மூன்றுலோகங்களையும் விசயம் செய்துகொள்ளலாம். இம்மந்திரங்களைச் சிரத்தையோடு கேட்காதவனுக்கும் இவற்றில்சிரத்தை இல்லாதவனுக்கும் மூடனுக்கும் செய்த நன்றிமறந்தவனுக்கும் பணிவிடை செய்யாதவனுக்கும், ஹரி பக்திபில்லாதவனுக்கும் விஷ்ணு த்வேஷிக்கும் நான்தான் எல்லாம் தெரிந்தவன் என்று கெர்வமடைந்தவனுக்கும் இம்மந்திரங்களை உபதேசித்தல் கூடாது. வசியம்செய்து கொள்கிற விஷயத்திலும், த்வேஷத்தைப் போக்குவதிலும், பூதபிசாசங்கள் சமீபத்தில் வரவொட்டாமைக்கும் இம்மந்திரத்தை விடவேறு மந்திரம் கிடையாது. நானும் இந்த மந்திரத்தை ஜபித்துத்தான் சம்ஹாரக்கிருத்தியத்தைச் செய்கிறேன். வியாதியைப் போக்கடிப்பதிலும் சத்ருவை ஜயிப்பதிலும் இம்மந்திரம் தகுந்த மருந்தாகும். விஷ்ணுவினிடத்தில் பக்தியுடையவன் இம்மந்திரத்தை ஜபித்தால் அவனுக்கு மோக்ஷபலன் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கிடைக்கிறது.

அனேகமாய்ச் சொல்வதினல் என்னலாபம். நீ இம்மந்திரத்தை ஜபித்துத்தாரகாசுரனை ஜயிக்கக்கடவாய். இப்படிப்பட்ட மந்திரத்தை ஜபித்துச் சுப்பிரமணியர் தாரகாசுரனைஜயித்துக் தேவர்களுடன் பிதாவினிடத்தில் உத்தாவுபெற்றுக் கொண்டு தேவலோகம் போய்ச்சேர்ந்தார்" என்றனர்.

பாத்ம புராணத்தில் துளஸிமகாத்மியத்தில்
துளஸிகவச வர்ணனை என்னும்
பதினைந்தாவது அத்தியாயம்
சம்பூர்ணம்.



## பதினறுவது அத்தியாயம்.



ஒருகாலத்தில் துளஸிதேவியின்மகிமையை விஸ்தரித்துச் சொல்லும்படி மரீசி முனிவர் கருடபகவானைப் பிரார்த்தித்த போது அவர், நாரதமுனிவருக்குச்சாக்ஷாத்பகவான் முன் சொல்லியருளியபடி சொல்லலுற்றார்.

யாவனொருவன் திரிகாண சுத்தியுடன் மண்டபமொன்று நிர்மித்து அதில் துளஸிதேவியை எழுந்தருளச்செய்து மேலத்தியாயங்களில் கூறிய பிரகாரம் பூஜித்துவருகிறானோ, அல்லது பிருந்தாவனம் உண்டு பண்ணி அதில் துளஸிதேவியைவைத்து விர்த்திசெய்கிறானோ அவன் இகத்திற்கான சுகமனைத்தும் பெற்று முடிவில் நிரதிசய இன்பமான பரமபதத்தை அடைகிறான் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஸ்ரீமந் நாராயணன் முன்னொருபோது நாரதருக்கும் லக்ஷ்மிபிராட்டிக்கும் உரைத்தருளிய கதையொன்றுண்டு. அதாவது வனவாசியாகிய வேடுவனொருவன் ஜீவஹிம்ஸை செய்வதிலேயே அதிக்ரமித்தவனுய்த் தீயவை என்று உலகில் வெறுக்கப்பட்ட செயல்கள் யாவையும் புரிந்துவந்தான். ஒருநாள் அவன் தனக்கு ஆகாரம் வேண்டி வன முழுதுந் திரிந்தலைந்தும் ஒன்றும் அகப்படாமல் பசியின் கொடுமையினல் ஒன்றுந்தோன்றுமல் ஒரு மரத்தடியிலுட்கார்ந்தான். அப்போது ஒருமிருகம் இவனிருக்கும் வழியாய்ஓடிவருவதைக்கண்டுசந்தோஷங்கொண்டு, இதுவும் நமது அதிர்ஷ்டந்தானென்று சிந்தித்து, அம்மிருகத்தைக் கொல்லும் நிமித்தம் தனுவை யெடுத்தான்.

ஓடிவந்த மிருகம் வேடனைக்கண்டதும் பீதியடைந்து அருகிலிரு ந்த துளஸிவனத்துட் பிரவேசித்தது. வேடுவனும் அதைப்பின் ருெடர்ந்து அம்பெய்தான். அதனுல் மிருகம் பிராணனைவிட்டு நற்கதியுற்றது. அனந்தரம் வேடன் அம்மிருகத்தின் மாமிசத் தால் தனது பசிப்பிணியைத்தணித்துக் கொண்டான். ஆயினும் இரண்டு தினங்களுக்குள் அவனும் பிராணனைவிட நேரிட்டது. உடனே எமதூதர்கள் பாசமுதலிய ஆயுதங்களுடன் வந்து அவ னைப்பற்றிக்கொண்டு தங்களிடம்போக எத்தனித்தபோது விஷ்ணு கிங்கரர்கள் பிரத்தியட்சமாய் எமபடாளைத்தடுத்துஅவர்களுக்குத் துளஸியின் மகாத்மியத்தைப் பலவாருக விளக்கி, இவ்வேடன் கொடிய பாபியேயானுலும் துளஸிக்காற்றின் பரிசம் பெற்றபடி யால் சர்வபாபங்களினின்றும்தப்பிமீண்டும் வராதநெறியான விஷ் ணுலோகத்தையடைதற்குரியவனுனன் என்று புகன்று வேடனை விமானத்தின் மீதேற்றி வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்ற னர். ஆதலால் பாபிஷ்டரும் துளஸியைப் பரிசிக்கப் பெற்ருல் இம்மைப்பயனையும் மறுமைப் பயனையும், வீட்டுப்பயனையும் அடைவார்களென்பது சத்தியம்.

மற்ருெருகாலத்தில் ரிஷிகளெல்லாரும் சூதமுனிவரைக்கண்டு துளஸிதேவியின் விஷயமாய்க்கேட்டபோது அவர் பின்வருமாறு கூறுவாராயினர். வாமதேவர் சுமேதர் என்னும் நாமதேயமுடைய அந்தணரிருவர் தீர்த்தயாத்திரையை மேற்கொண்டு வடப்பிரதேச மார்க்கமாகச்செல்லுகையில் வழியில் துளஸிவனம்ஒன்றைப்பார்த் தார்கள். பார்த்ததும் சுமேதர் என்பவர் அதை வலம்வந்து நமஸ் கரித்தார். இதனைக்கண்டவாமதேவர், சுமேதரை நோக்கிஸ்வாமி! வழிபடுதற்குரிய வஸ்துக்கள் பலவிருக்க, அவற்றைஎல்லாம்விட்டு இத்துளஸிவனத்தை நமஸ்கரித்த காரணமென்னை? அதை எனக் கு எடுத்துச்சொல்லவேண்டுமென்று கேட்டார். அதற்குச் சுமே தர் அப்படியே ஆகட்டுமென்று ஓராலமரத்தடியில் வீற்றிருந்து துளஸிதேவியின் உற்பத்திக்கிரமத்தையும் மாஹாத்மியத்தையும் முன் அத்தியாயங்களில் விளக்கியபடி சொல்லி முடிக்கும்போது ஒரு விமானம் இவர்கள் முன் காணப்பட்டது. அதில் சுந்தர மான புருஷரிருவர் இருந்தனர். இந்த இரண்டு புருஷர்களும் விமானத்தை விட்டிறங்கி வந்து மேல்படி பிராமணரிருவரையும் நமஸ்கரித்து சுவாமிகாள்! நாங்களிருவரும் பூர்வத்தில் செய்த பெரியோர் நிந்தையாலும் குருத்ரோகத்தாலும் பிரம ராக்ஷ ஸுக்களாய்ச் சபிக்கப்பட்டு இவ்வனத்திற் சஞ்சரித்துக் கொண்

டிருந்தோம். இப்போது நீங்கள் வசனித்துக் கொண்டு வந்த துளஸிதேவியின் ப்ரபாவத்தைக்கேட்க, எமது சாபம் விமோசனமாயிற்று. உடனே இவ்விமானம் வந்து எங்களைப் பரமபதத்திற் கழைத்துப்போகின்றது. பரோபகாரிகளாகிய உங்களைப்பார்த்து நமஸ்காரஞ் செய்துவிட்டுப்போகலாமென்று உங்கள் கண்களுக்குப் புலப்பட்டோம். எங்களுக்கு விடைதரவேண்டுமென்று பணிவுடன் கேட்டுமறைந்தனர் என்றுரை செய்தார்.

இத்துளஸிதேவியின் மகத்வத்தைச் சதுர்முகக்கடவுள் வியாசருக்கும், பிராட்டி இந்திராணிக்கும் அனேக விதங்களாய்ச் சொல்லியிருக்கின்றனர். பார்வதி, சீதை, தமயந்தி, குந்தி, மாந்தாதா முதலிய சிரேஷ்டர்களாலும் இத்துளஸிதேவியின் பூஜையானது விதிப்படி கொண்டாடப்பட்டு, அவரவர்கள் தத்தமது அபீஷ்டத்தை நிறைவேற்றிக்கொண்டார்கள்.

ஐப்பசி மாதம், சுக்லபக்ஷம், துவாதசி யன்று துளஸிதேவியின் பூஜையானது விதிப்படி ஆரம்பிக்கப்படவேண்டும். தங்கத்தினுலேனும் வெள்ளியாலேனும், சதுர்ப்புஜங்களோடுகூடிய துளஸிதேவியின் திருவுருவைச்செய்து பொன்னுலாகிய மேடையின்மேலே தாமரைரேகைகளால் சித்திரித்து இருபது மரக்கால் நெல்லைப்பரப்பி, பதினுறு கலசங்களை நால்களாற் சுற்றி யலங்கரித்து வைத்து, நான்கு கலசங்களைப் பாலுள்ள மரத்தின் கிளையிலிருக்கும் மொட்டுக்களால் நிரப்பிவைத்து, நூல், வஸ்திரம்,ஜலம் இவற்றுல் சம்பூர்ணமான புதிய கலசத்தையும் எதிரில் வைத்து, துளஸிதேவியின் திருவுருவை எழுந்தருளச்செய்து சோடசோபசாரம்புரிந்து, அஷ்டாக்ஷரம் புருஷ சூக்தம் இவற்றுல் அர்ச்சித்து, தக்க ஆசாரியரை ஏற்படுத்தி அவரைக்கொண்டு நூற்றெட்டுதரம் ஓமம் வளர்த்தி தக்ஷிணைதாம்பூலங்களால் ஆசாரியரைச் சன்மானிக்கவேண்டும். இவ்வாறு பிரதிதினமும் செய்து வரவேண்டும். குறைந்தது பனிரண்டு நாளாவது இப்படி முடித்துவரவேண்டும். இதிற் குறைநேரிட்டால் இஷ்டபலன் சித்தியாகாமல் கெடுதியேயுண்டாகும். இப்பூஜையைக் கார்த்திகை மாதம் சுக்லபக்ஷம் துவாதஸியில் பூர்த்திசெய்யவேண்டியது. யாவரொருவர் மேற்கூறியபடி துளஸிதேவியைப் பூஜித்துவருகிருரோ அவர் தாம் கோரிய அபீஷ்டங்களை யெல்லாம் அடைந்து முடிவில் வைகுண்ட பிராப்தியையும் பெறுவர் என்பது, திண்ணம் என்று முடித்தருளினுர்.

துளஸிமஹாத்மியம் முற்றுப் பெற்றது.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர்திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# அறிக்கை.



துளஸிமாஹாத்மியம் - படத்துடன்:—இவ்வருமையான நூல் வடமொழியிலுள்ளது இதுபரியந்தம் தமிழில்வாராதது. சூதபுராணிகர் சநகாதி மகாரிஷிகளுக் கெடுத்தோதியது. தற்போது தக்க சமஸ்கிருத பண்டிதர்களைக்கொண்டு தமிழ்ப்படுத்திப் பலர்க்கும் பயனுமாறு செவ்விய நடையில் வசன ரூபமாக எழுதி வெளியிடப்பட் டிருக்கிறது. ஆண்மக்களே யன்றிப் பெண்மக்களும் வாசித்தற்குரியது. படிக்கப்படிக்க இன்பத்தையும் பக்திரசத்தையும் தந்து சதாசாரவழியில் நிலைநிறுத்தவல்லது. விலை அணா ஐந்தே.

ஸ்ரீராமாரண்ய நிவாஸசதுர்த்தசாப்தப் பிரகாசிகை:—இது ஸ்ரீ ராமர் வனத்திற்கழித்த பதினான்கு வருடத்தின் விளக்கத்தை வெளிப்படுத்துவது. இனிய செந்தமிழ் வசனநடையில் யாவர்க்கும் பயன்படும்படி எழுதப்பட்டுள்ளது. இவ்விளக்கத்தை நன்கறிய விரும்புமவர்கட்குப் பெரிதும் வேண்டற்பாலது. இத்துடன் முகுந்தமாலை, ஸ்காந்தாதோத்திரம், தேவராஜாஷ்டகம் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விலை அணா இரண்டே.

ஆழ்வார் பரத்வநிர்ணயம் படத்துடன்:—பரத்வ நிர்ணயத்தை அறிந்து கொள்ளும் ஆவல் மிகுந்துள்ள யாவர்க்கும் இஃது இன்றியமையாதது. விலை அணா ஒன்றே.

ஸ்ரீமத் குருபரம்பராப்ரபாவம் முதற்பாகம்:—இக்கிரந்தம் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்திரீபுமான்களுக்கே யன்றி இத்தருமத்தையுள்ளபடி யறியவிச்சிக்கும் பிறர்க்கும் இனிது விளங்கும்படி, செவ்விய தமிழில், வசனரூபத்தில், பூர்வாசார்யர்களுடைய நியமத்திற்கு ஒரு சிறிதும் பிறழாது, குறித்த விஷயங்களை உடனுக்குடன் கண்டுகொள்ள "விஷயசூசிகை"யோடும், பரத்வ நிர்ணயத்தோடும், அரிய வடமொழிப் பதங்களுக்குக் குறிப்புரையோடும், சுலோகங்களின் கருத்துக்களோடும், ஆழ்வாராதி திருவுருவப் படங்களோடும், கர்ணபரம்பரையான அனேக விஷயங்களைத் தக்க ஆதாரத்தின் மேல் சேர்த்து வெளியிடப்பட்டுள்ளது. விலை ரூபாய் இரண்டே.

இக்கிரந்தங்களும் இன்னும் இதர சம்ப்ரதாயகிரந்தங்களும் வேண்டுபவர் அடியிற்கண்ட விலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம். தபால் வி. பி சார்ஜுக்கள் பிரத்யேகம்.